ஹரி : ஓம்

ஹரி ஸர்வோத்தம வாயு ஜீவோத்தம

# ஸ்ரீ மத்வ மஹானீயர்கள்



ப்ரதமோ ஹனுமான்நாம த்விதீயோ பீம ஏவச ।
பூர்ண ப்ரக்ஞ த்ருதீயஸ்து பகவத் கார்ய ஸாதக: ॥

ஹரி : ஓம்

ஹரி ஸர்வோத்தம வாயு ஜீவோத்தம

# ஸ்ரீ மத்வ மஹநீயர்கள்

This Book is published with the financial assistance of Tirumalai Tirupathy Devasthanam under the scheme "Aid to Publish Religious Books"


தொகுத்து எழுதி வெளியிட்டவர்:

**S. பூவராகமூர்த்தி**

சிண்டிகேட் பேங்க் ( Retd. )

5-3-241, காண்ட்ல மிட்டா தெரு,

திருப்பதி - 517507

| | | |
|---|---|---|
| வெளியீடு | : | சித்ரபானு கார்த்தீக பௌர்ணமி |
| தொகுத்து எழுதி வெளியிட்டவர் | : | S. பூவராகமூர்த்தி |
| பிரதிகள் | : | 1000 |
| விலை | : | ரூ. 20-00 |
| அச்சிட்டவர் | : | விஜயா பிரஸ்<br>மண்ணிவாக்கம்,<br>சென்னை - 600 048 |

# மதிப்புரை

நமது பாரததேசம் ஆன்மிக விஷயங்களில் தர்ம ஆசரணையில் சிறந்து விளங்கக் காரணம் இது கர்மபூமி. தேவான தேவதைகள் கூட பலஜென்மங்களை பல இடங்களில் எடுத்த போதிலும் பாரதகண்டத்தில் பிறந்த பிறகு தான் அபரோக்ஷ ஞானிகளாகிறார்கள். பல தர்மங்கள், பல கோட்பாடுகள் பாரத தேசத்தில் தழைத்திருந்த போதிலும் கடைசியாக தோன்றிய கொள்கைகளே "அந்தியே சித்தஸ்து சித்தாந்த:" என்ற வகையில் நிலைத்து நிற்கிறது. அதுதான் துவைத மதத்தின் கொள்கைகள். இதை உலகிற்கு பறைசாற்றியவர் வாயு பகவானாகிய ஸ்ரீ மத்வாசார்யார் என்ற அவதாரம். தேவரில் சிறந்த வாயு பகவானே பூலோகத்திற்கு வந்த பிறகு அவருடைய சேவையை செய்வதற்காகவே மற்ற தேவர்களும் அவதரித்தனர். அவர்களே ஸ்ரீ மத்வ மஹனீயர்கள். சாஸ்திரங்களை படிப்பதோடு கூட குருகளின் வாழ்க்கை வரலாறுகளையும் தெரிந்துகொள்வதும் முக்கியம் என்று பிருகத்ஜெயதீர்த்த விஜயம் எழுதிய ரகுநாத தீர்த்தர் கூறுகிறார். இந்த நூலில் பல ஆச்சார்யர்கள், தாசர்கள் மற்றும் பல சான்றோர்களின் வாழ்க்கை வரலாறுகள் சிறிய அளவில் சிறப்பாக சொல்லப்பட்டிருக்கிறது. வளரும் அடுத்த தலைமுறையினருக்கு இது ஆரம்ப பாடமாகவும் படித்த ஆன்றோர்களுக்கு இது புரஸ்சரணமும் ஆகிறது. இதை எழுதிய சிண்டிகேட் வங்கியில் இருந்து ஓய்வு பெற்ற ஸ்ரீ S. பூவராகமூர்த்தி நீண்ட நெடுங்காலம் வாழ்ந்து பல அரிய பெரிய தத்துவங்களை இதைப் போல் உலகத்தாருக்கு வழங்கிட வேண்டும். பொருளுதவி புரிந்த திருமலை-திருப்பதி தேவஸ்தானத்திற்கும் இதை நல்ல முறையில் அச்சிட்டுக் கொடுத்த விஜயா பிரஸ் ஸ்தாபனத்தாருக்கும் நன்றி. ஸர்வோத்தமனான ஸ்ரீ ஹரி அனைவரையும் அனுக்ரஹம் செய்யட்டும்.

Plot 12, புத்தர் தெரு,
புதுபெருங்களத்தூர்,
சென்னை - 600063.

ஹரிதாஸ பாததூளி
**B. R. நாகராஜ ராவ்**
ஹரிகதா வித்வான்

ஹரி : ஓம்

ஹரி ஸர்வோத்தம வாயு ஜீவோத்தம



# ஸ்ரீமன் மத்வாசார்யார்

(கி.பி. 1238 - 1317)

அப்ரமம் பங்கரஹிதம் அஜடம் விமலம் ஸதா ।
ஆனந்ததீர்த்த மதுலம் பஜே தாபத்ரயா பஹம் ॥
ப்ரதமோ ஹனுமான்நாம த்விதீயோ பீம ஏவச ।
பூர்ண ப்ரக்ஞ த்ருதீயஸ்து பகவத் கார்ய ஸாதகம் ॥

நம்முடைய பாரத தேசத்தில் எத்தனையோ மகான்கள் அவதரித்து இருக்கிறார்கள். அவர்களில் நம்முடைய மத்வ மதத்தை பிரச்சாரம் செய்த மஹனீயர்கள் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டியது நமது தலையாய கடமை. அவர்களில் முதலாவதாக நாம் நமது ஆசார்யரான மத்வரைப் பற்றி தெரிந்து கொள்வோம்.

இந்துமதம் தழைத்தோங்க பலபெரியவர்கள், மதாச்சார்யர்கள் தொண்டு புரிந்து இருக்கிறார்கள். அத்வைதமும் விசிஷ்டாத்வைதமும் பாரத மண்ணில் வழக்கத்தில் இருந்த நேரத்தில் கர்னாடகா மாநிலம், தென் கன்னடம் மாவட்டம், உடுப்பிக்கருகில் பாஜக க்ஷேத்திரத்தில் ஒரு குழந்தை அவதரித்தது (இவர்

வாயுதேவரின் 3வது அவதாரம்). அந்தக் குழந்தை அவதரித்தது 1238ல் விஜயதசமி அன்று. அந்தக் குழந்தையின் பெற்றோர்கள் வேதவதிதேவி, மத்யகேஹபட்டர். அதாவது விளம்பி வருடம் ஆனி மாதம் சுபதசமி. இவர் பெற்றோர்களுக்கு 2வது பிள்ளை, வாசுதேவன் என்று பெயரிட்டனர். சிறு பிராயம் முதலே குழந்தை ஆசாரம் அனுஷ்டானம் ஆகியவைகளில் ஈடுபாடு கொண்டிருந்தது. உரிய நேரத்தில் தந்தையார் வாசுதேவனுக்கு உபநயனம் செய்வித்தார். வாசுதேவன் பெற்றோர்களின் அனுமதியின் பேரில் அச்சுதப்ரேக்ஷர் என்ற குருவை அணுகி சன்யாச ஆஸ்ரமம் பெற்றார். இப்பொழுது இவர் மத்வாசார்யார், ஆனந்த தீர்த்தர் , பூர்ணப்ரக்ஞர் என்று பல பெயர்களில் அழைக்கப்பட்டார். மத்வருக்கு முன்னால் பிரம்ம சூத்திரத்திற்கு 21பேர்கள் பாஷ்யம் எழுதினார்கள் - ஆனால் மத்வாசார்யார் 22வதாக எழுதியதுதான் சிறந்தது என்று அனைவராலும் பாராட்டப்பட்டது,புகழப்பட்டது. இவருடைய பிரதமசீடர் சோபனபட்டர் என்கின்ற பத்மநாபதீர்த்தர் ஆவார். சர்வ மூல கிருந்தங்கள் என்று சொல்லக்கூடிய 37 கிரந்தங்களை மத்வாசார்யார் இயற்றி இருக்கிறார். உடுப்பியில் ஓர் நாள் இவர் கிருஷ்ணனை பூஜை செய்யும்போது ஹனும, பீம, மத்வ ரூபங்களை எடுத்ததால் இராமாவதாரத்தில் ஹனுமானாகவும், கிருஷ்ணாவதாரத்தில் பீமனாகவும், வேதவியாசராக தோன்றியபோது ஸ்ரீமத்வராகவும் அவதரித்தார் என்பது நமது அசைக்க முடியாத நம்பிக்கை. ஒரு நாள் இவர் கடற்கரையில் இருக்கும்போது கப்பல் ஒன்று புயலில் சிக்கியதைக் கண்டார். காவி வஸ்திரத்தை அசைத்து காற்றை நீங்கச் செய்து கப்பலை கரையேறச் செய்தார். மகிழ்ச்சி கொண்ட மாலுமி உங்களுக்கு எது வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள் என்று கூற நமது மத்வர் கப்பலின் மூலையில் இருந்த

கோபிசந்தனத்தை எடுத்துக் கொண்டார். அதில் ஒரு கிருஷ்ண விக்ரஹம் இருப்பதை அறிந்து கொண்டு அந்த கிருஷ்ண விக்ரஹத்தை உடுப்பியிலேயே பிரதிஷ்டை செய்தார். அவரைப் பூஜிப்பதற்காக எட்டு மடங்களை நிறுவி எட்டு பால சன்யாசாஸ்ரமம் கொடுத்து அவர்களை "பர்யாய" அடிப்படையில் பூஜை செய்யக் கூறினார். அந்த 8 மடங்கள்தான் இன்று அஷ்டமடங்கள் என்று சொல்லக்கூடிய பாலிமார், அத்மார், கிருஷ்ணாபுர, புத்திகே, சிறூர், சோதே, காளியூர், பேஜாவர் மடங்கள். ஸ்ரீஹரியே ஸர்வோத்துமன் என்பது இவரது கொள்கை. மாத்வர்கள் வீட்டில் சுவாமி பூஜையின் போது நைவேத்தியம் செய்யும் வேளையில் இவர் இயற்றிய துவாதஸ ஸ்தோத்திரம் கூறப்படுகிறது. இவர் இன்னும் பத்ரிகாஸ்ரமத்தில் தவம் செய்து கொண்டிருப்பதாக மாத்வர்களின் நம்பிக்கை. அன்று மாகசுத்த நவமி மத்வாசார்யார் தன் சீடர்களுக்கு ஐத்ரேய உபநிஷத் பாடம் சொல்லிக்கொண்டிருக்கிறார். தேவதேவர்கள் மலர் மாலை பொழிந்தார்கள். ஆம் வேதவியாசரை தரிசிக்க பத்ரிகாஸ்ரமம் சென்றுவிட்டார். அந்தநாளைத்தான் நாம் மத்வநவமி என்று அழைக்கிறோம். சீரும் சிறப்புமாக அந்த நாளைக் கொண்டாடுகிறோம். அவர் கூறிய பஞ்ச பேதங்கள் :

*ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்கும் பேதம்*
*ஜடத்திற்கும் ஈஸ்வரனுக்கும் பேதம்*
*ஜீவனுக்கும் ஜடத்திற்கும் பேதம்*
*ஜீவனுக்கும் ஜீவனுக்கும் பேதம்*
*ஜடத்திற்கும் ஜடத்திற்கும் பேதம்*

வாழ்க மத்வரின் நாமம்! வல்லபாசார்யா, சைதன்யர் போன்றவர்கள் மத்வருடைய கொள்கைகளை ஆதரித்தனர்.

வளர்க அவரின் துவைத சித்தாந்தம்.



# ஸ்ரீ ஜெயதீர்த்தர்

(கி.பி. 1353 - 1388)

சித்ரை: பதைஸ்ச கம்பீரை: வாக்யைர் மானைர கண்டிதை: |
குருபாவம் வ்யஞ்ஜயந்தீ பாதி ஸ்ரீஜய தீர்த்தவாக் ||

மராட்டிய மாநிலம் பண்டராபுரத்திற்கு அருகில் உள்ள மங்களவேடு என்கிற கிராமம்தான் ஸ்ரீ ஜெயதீர்த்தரின் அவதாரஸ்தலமாகும். இவரது பூர்வாஸ்ரமப் பெயர் தோண்டுராவ் என்பதாகும். இவருடைய பெற்றோர்கள் ரகுநாதராவ் தேஷ்பாண்டே, தாயார் நச்சம்மா. ஜெயதீர்த்தரின் குரு ஸ்ரீ அக்ஷோப்ய தீர்த்தர் ஆவார். குருவான அக்ஷோப்ய தீர்த்தரின் பிருந்தாவனமும் சிஷ்யரான ஜெயதீர்த்தரின் பிருந்தாவனமும் குல்பர்கா சமீபம் மல்கேடாவில் இருக்கிறது. ஜெயதீர்த்தர் இல்லை என்றால் மத்வரின் கிரந்தங்களை படிக்கும் பேறு நமக்கு இல்லாமல் போய் இருக்கும். ஸ்ரீ மத்வரின் நூல்களுக்கு நமக்கு பொருள் புரியும்படி டீகை, எழுதியவர் ஸ்ரீ ஜெயதீர்த்தர். அதனால் தான் அவருக்கு "டீகாசார்" என்ற காரணப் பெயர் இருக்கிறது. மத்வாச்சார்யரின் அணுபாஷ்யத்திற்கு நியாயசுதா என்ற பெயரில் டீகை எழுதி இருக்கிறார்.

மத்வமதக் கொள்கைகளை பாரெங்கிலும் பறைசாற்றிய பெருமை இவருக்குண்டு. இவர் இயற்றிய

நியாயசுதாவை படித்தால்தான் நமது சமூகத்தில் ஒரு அந்தஸ்து உள்ள பண்டிதனாக மதிக்கப்பெறுகிறார். குரு பரம்பரையில் மத்வரைவிட்டு கணக்கெடுத்தால் இவர் 5வது குருகளாக வருகிறார். மாத்வராகப் பிறந்த ஒவ்வொருவரும் அவசியம் பார்க்க வேண்டிய ஊர் மல்கேடா ஆகும்.

இந்திரனின் அம்சமான ஜெயதீர்த்தர் முன் பிறவியில் எருதாக இருந்து மத்வரின் நூல்களை சுமந்து சென்றிருக்கிறார். மத்வர் தமது சீடர்களுக்கு பாடம் சொல்லிக்கொடுக்கும்போது எருதாக இருந்த ஜெயதீர்த்தர் அவர் சொல்வதை மிகவும் உன்னிப்பாக கவனித்துக் கொண்டிருப்பார். ஆனந்த தீர்த்தரும் அவரை நோக்கித்தான் பாடம் சொல்லிக் கொடுப்பாராம். ஒரு நாள் சீடர்கள் மத்வரை நோக்கி தங்களுக்குப் பிறகு உங்கள் கிரந்தங்களுக்கு பொருள் புரியும்படியாக யார் இப்படி சொல்லிக் கொடுப்பார் என்று கேட்க நமது மத்வர் அந்த எருதைச் சுட்டிக்காட்டி இது சொல்லும் என்று கூறினாராம். இதை சகித்துக் கொள்ளாத அவரது சீடர்கள் சிலர் அந்த எருதிற்கு விஷம் கொடுத்துக் கொன்றுவிட்டனர். ஆனால் நமது ஆசார்யாரோ துவாதஸ ஸ்தோத்திரம் சொல்லி அந்த எருதை பிழைக்கவைத்தாராம். திடீரென்று ஒரு நாள் குருவான அக்ஷோப்ய தீர்த்தருக்கு ஒரு சந்தேகம் வந்தது. தனக்குப் பிறகு ஆஸ்ரமத்தை எடுத்துக் கொள்பவர் யார்? மூல ராமனை பூஜிக்கப் போகிறவர் யார் என்ற கவலையுடன் படுக்கைக்குச் சென்ற அக்ஷோப்ய தீர்த்தருக்கு கனவில் சந்திரபாகா நதியில் யார் குதிரை மீது அமர்ந்து வாயினால் தண்ணீரை குடிக்கிறாரோ அவருக்கு சன்யாச ஆஸ்ரமம் தந்துவிடு என்று யாரோ ஒருவர் கூறினார். தனக்கு ஒரு சிஷ்யர் கிடைத்துவிட்டார் என்ற சந்தோஷத்தில் குரு அக்ஷோப்யர் பீமா நதிக்குச் சென்றார். என்ன ஆச்சரியம்! அவர் கனவு பலித்து விட்டது. ஆம் தோண்டுராயர் குதிரை மீது அமர்ந்து வாயை தண்ணீரில்

வைத்துக்கொண்டே நீரைப் பருகினார். இதைப் பார்த்த குரு என்ன எருதைப் போல தண்ணீரைக் குடிக்கிறாயே என்று கேட்கவும் தோண்டுராயருக்குப் போன ஜன்மத்தில் தாம் ஒரு எருதுவாக இருந்தது, அவர் மத்வரிடம் பாடம் கேட்டது எல்லாம் நினைவிற்கு வந்தது. குருகள் தான் கண்ட கனவு பற்றி கூறி தோண்டுராயரை ஆஸ்ரமத்தை ஏற்கச் சொன்னார். அவரும் அதை ஒப்புக்கொண்டார். ஆனால் அவருடைய தந்தையோ அவரை சம்சார பந்தத்தில் சிக்கிவிட எத்தனித்தார். தோண்டுராவின் தந்தை தோண்டுராவிற்கு விவாஹம் செய்வித்து முதல் இரவு ஏற்பாடு செய்து அவரைஅறையில் இருக்கச் செய்து அவரது மனைவியை அறைக்குள் அனுப்பி வைத்தார். ஆனால் தோண்டுராவின் மனைவி அலறி புடைத்துக் கொண்டு வெளியே வந்துவிட்டார். வெளியே வந்து அவள் தன் கணவரை மிகப் பெரிய பாம்பு ரூபத்தில் கண்டதாக் கூறினாள். இதைக் கேள்விப்பட்ட தோண்டுராவின் தந்தை மகனை அக்ஷோப்ய தீர்த்தரிடமே ஒப்புவித்தார். மகன் சன்யாஸ ஆஸ்ரமம் ஸ்வீகரித்துக் கொண்டு ஜெயதீர்த்தர் என்ற பெயரில் மத்வமதத்திற்கு மிகப்பெரிய தொண்டினை செய்து வந்தார். இவர் தத்துவபிரகாசிகா, நியாயவிவரண,நியாயதீபிகா போன்ற பல நூல்களை எழுதி இருந்தாலும் இவர் எழுதிய நியாயசுதாவிற்கு ஈடு இணை கிடையாது. ஜெயதீர்த்தரின் அருமை பெருமைகளை கூற இக்கட்டுரை ஆசிரியரால் முடியாது. அவரைப் பற்றியும் அவர் நமது மதத்திற்குச் செய்த சேவையையும் பக்கம் பக்கமாக எழுதலாம். மொத்தத்தில் நமது மத்வமதம் தழைக்க த்வைதமத சித்தாந்தம் வேரூன்ற அவர் ஆற்றிய தொண்டு மகத்தானது. அவருடைய பிருந்தாவனம் குல்பர்கா சமீபம் மல்கேடாவில் இருக்கிறது. அவரது ஆராதனை நாள் ஆஷாட பகுளபஞ்சமி அன்று வருகிறது.



# ஸ்ரீ ஸ்ரீபாதராஜர்

(கி.பி. 1404 - 1502)

தம் வந்தே நரஸிம்ஹதீர்த்த நிலயம் வியாச ராட் பூஜிதம் ।
தியாந்தம் மனசா ந்ருஸிம்ஹ சரணம் ஸ்ரீபாதராஜ குரும் ॥

வடமொழி விற்பன்னர்கள் வடமொழியில் கூறி வந்த வேத கருத்துக்களையும் உபநிஷத் சாரங்களையும் பிழிந்து அதன் அடிப்படையிலேயே சரள கன்னடத்தில் பாடல்களை புனைந்த சாகித்ய கர்த்தா ஸ்ரீ ஸ்ரீபாதராஜர் ஆவார். இவர் புரந்தர தாசரின் முன்னோடியாகத் திகழ்ந்தார். இவருடைய பூர்வாஸ்ரமப் பெயர் ஸ்ரீ லக்ஷ்மி நாராயணன் என்பதாகும். உத்திராதி மடத்து ஸ்வாமிகளான ஸ்ரீ ரகுநாத தீர்த்தரின் வாயால் இவர் ஸ்ரீபாதராஜர் என்ற பட்டத்தைப் பெற்றார்.

இவர் பிறந்தது கி.பி. 1404-ல். இவரது பெற்றோர்கள் சேஷகிரியப்பா-கௌரம்மா ஆவார்கள். இவருடைய குரு ஸ்வர்ணவர்ண பரசுராம தீர்த்தர் என்பவர் ஆவார். ஒரு நாள் மாலை நேரம் ஸ்வர்ணவர்ணர் பல்லக்கில் வரும்போது மாடு மேய்த்துக் கொண்டு இருந்த லக்ஷ்மி நாராயணனைப் பார்த்து ஊர் இன்னும் எவ்வளவு

தூரம் இருக்கிறது என்று கேட்கவும் அச்சிறுவன் என்னைப் பாருங்கள், மாடுகளைப் பாருங்கள், கதிரவனைக் காணுங்கள் என விடுகதை போல பதிலளித்தான். இந்தப் பதிலைக் கேட்ட ஸ்வர்ணவர்ணர் அந்த சிறுவனின் அறிவாற்றலையும் புலமையையும் கண்டு வியந்து தனக்குச் சரியான ஒரு சிஷ்யன் கிடைத்துவிட்டான் என நினைத்து அகமகிழ்ந்தார். ஸ்ரீபாதராஜரின் சீடர் நமது அடுத்த அத்தியாயத்தின் கதாநாயகனும், முனித்ரயர்களில் ஒருவரான ஸ்ரீவியாசராஜர் ஆவார். ஒரு நாள் ஸ்ரீவியாசராஜரை பெரிய பாம்பு ஒன்று சுற்றிக் கொண்டது. இதைக் கண்ணுற்ற ஸ்ரீபாதராஜர் பாம்பு பாஷையிலேயே பேசி அந்த பாம்பை போகச் செய்தார். நீண்ட நாட்களாக ஸ்ரீபாதராஜரால் திறக்க முடியாமல் இருந்த சம்புடத்தை ஸ்ரீவியாசராஜர் திறந்து, பாட ஆரம்பித்தார். அவருடைய பாடலுக்கேற்ப பகவான் நடனமாடினார். இதைக் காண ஓடிவந்த ஸ்ரீபாதராஜர் வந்ததும் பகவான் ஆடுவதை ஒருகாலை தூக்கி நிறுத்திக் கொண்டார். சிஷ்யனின் அபார பக்தியைக் கண்டு குரு மனமகிழ்ந்தார். இதைத்தான் குருவிற்கு மிஞ்சின சிஷ்யன் என்பதா? ஏதோ கோபத்தின் காரணமாக சந்திரகிரியை ஆண்ட அரசன் அர்ச்சகர்களை வேலையை விட்டு நீக்கிவிட ஏழுமலையானுக்குப் பூஜை செய்ய ஆளில்லாமல் போயிற்று. ஸ்ரீபாதராஜரின் உத்தரவுப்படி ஸ்ரீவியாசராஜர் திருப்பதி வெங்கடேச பெருமாளுக்கு 12ஆண்டுகள் பூஜை செய்தார். துறவியாக இருந்தாலும் அனுதினமும் அறுசுவை உணவை உட்கொள்ளக்கூடியவர் ஸ்ரீபாதராஜர். ஒரு நாள் ஸ்ரீபாதராஜர் ஒரு நடுக்காட்டில் இருக்க வேண்டிய கட்டாய சூழ்நிலை ஏற்பட்டது. இதை கேள்வியுற்ற அவரின் சீடர்கள் இன்று நமது குரு எப்படி மிருஷ்டான்ன போஜனம் உண்கிறார் பார்க்கலாம் என்றனர். என்ன ஆச்சரியம்! ஒரு வழிப்போக்கன் ஒரு வண்டி நிறைய மளிகை சாமான்களை

ஏற்றி ஸ்வாமிகளிடம் வந்து , ஐயா நான் வருடாவருடம் ஏழுமலையானுக்கு இந்த மளிகை சாமான்களை கொடுப்பது வழக்கம். நேற்று இரவு வெங்கடாசலபதி கனவில் வந்து இந்த மளிகை சாமன்களை உங்களிடம் சமர்பிக்கும்படி கட்டளையிட்டார் என்றுகூறி அந்த ஒரு வண்டி மளிகை சாமான்களையும் ஸ்ரீபாதராஜருக்கு காணிக்கையாகக் கொடுத்தான். அந்த நடுக்காட்டில் மடத்தைக் காட்டிலும் அறுசுவை உணவு கேலி பேசினவர்களுக்கும் சேர்த்து பரிமாறப்பட்டது. இன்று கூட ஸ்ரீபாதராஜரை நினைத்துக் கொண்டால் நாம் சாப்பாட்டிற்கு கஷ்டப்பட வேண்டிய அவசியம் இருக்காது. ஒருநாள் காசிக்குச் செல்ல சீடர்களுடன் ஸ்ரீபாதராஜர் ஆயத்தம் செய்து கொண்டிருந்தார். ஆனால் அவருடைய கனவில் கங்கை தோன்றி நீ அவ்வளவு தூரம் வரவேண்டாம். நானே நாளைய தினம் நரசிம்ம தீர்த்தத்தில் பிரவாகிப்பேன் எனக் கூறி மறைந்தாள். மறுநாள் ஸ்ரீபாதராஜர் தன் சீடர்களுடன் நரசிம்ம தீர்த்தத்தில் காத்திருக்க ஒரு மூலையில் கங்கை பிரவாகம் எடுத்து ஓடுவதைக் கண்ணுற்ற ஸ்ரீபாதராஜர் தன் சீடர்களுடன் அங்கேயே கங்காஸ்னானம் செய்தார். "ரங்கவிட்டல" என்ற அங்கிதத்தில் கன்னடத்தில் ஏராளமான பாடல்கள், சுளாதிகள், உகாபோகங்கள் இயற்றி இருக்கிறார். இவர் துருவனின் அவதாரம் என்று கூறப்படுகிறது. இவரது ஆராதனை சென்னை பெங்களூர் மார்கத்தில் முளுபாகலுக்கு அருகில் உள்ள ஸ்ரீநரசிம்ம தீர்த்தத்தில் ஜேஷ்டபகுள சதுர்தசி அன்று கோலாகலமாக கொண்டாடப்படுகிறது. தற்போதைய ஸ்ரீபாதராஜமடத்தின் மடாதிபதிகள் ஸ்ரீவிக்ஞானநிதி தீர்த்தர் ஆவார்.



# ஸ்ரீ வியாசராஜர்

(கி.பி. 1447 - 1529)

அர்த்திகல்பித கல்போயம் ப்ரத்யர்த்திகஜ கேஸரீ I
வ்யாஸதீர்த்த குருர்பூயா தஸ்மதிஷ் டார்த்த ஸித்தயே II

ஸ்ரீ ஜெயதீர்த்தருக்குப் பிறகு மக்களால் மிகவும் புகழப்பட்டு, பேசப்பட்டு போற்றப்பட்டவர் முனித்ரயர்களில் ஒருவரான வியாசராஜர் ஆவார். காவேரிக்கரையில் உள்ள பன்னூரில் காஸ்யப கோத்திரத்தில் அவதரித்தார். இவருடைய பெற்றோர்கள் ஸ்ரீராமாச்சார் - சீதம்மா ஆவார்கள். வியாசராஜரிடம் 24 சிஷ்யர்கள் பாடம் படித்ததாக வரலாறு கூறுகிறது. அதில் ஒருவர்தான் பிற்காலத்தில் விஜயீந்தரர் என்று எல்லோராலும் புகழப்பட்ட ஸ்ரீவிஷ்ணுதீர்த்தர் ஆவார். வாதிராஜர், புரந்தரதாஸர், கனக தாஸர் போன்ற மகனீயர்கள் வியாசராஜரின் சீடர்கள் ஆவார்கள்.

வியாசராஜர் பல நூல்களை இயற்றி உள்ளார். பலராலும் பாராட்டப்பட்ட நியாயாம்ருதம், சந்திரிகா, தர்க்கதாண்டவம் என்ற மூன்று நூல்களுக்கு , ரத்னத்ரயம் என்ற பெயரும் உண்டு. இவர் ஹம்பியில் ஆஞ்சநேயருக்கு ஒரு கோவில் கட்டினார். அது யந்த்ரோத்தார ஹனுமார் என்று பிரசித்தி பெற்றது. அதை தொடர்ந்து இவர் 732 ஆஞ்சநேயர்களை பிரதிஷ்டை செய்தார். திருப்பதியில் உள்ள ஸ்ரீ வெங்கடாசலபதியை 12 ஆண்டுகள் பூஜை செய்த பாக்கியம் இவருக்கு மட்டும்தான் கிட்டியது. கிருஷ்ணதேவராயரின் குருவான ஸ்ரீ வியாசராஜர் ஒரு நாள் கிருஷ்ணதேவராயருக்கு குஹயோகம் சம்பவிக்கப் போகிறது என்பதை அறிந்தார். வியாசராஜரே அந்த சிம்மாசனத்தில் அமர்ந்து அரசனைக் கீழே நிற்கச் சொன்னார். தனது மேலுள்ள காவி அங்கவஸ்திரத்தை எடுத்து அந்த சிம்மாசனத்தில் போட அது நெருப்புப் பற்றி எரிந்தது. கிருஷ்ணதேவராயர் குஹயோகத்திலிருந்து தப்பினார். குஹயோகம் என்பது செவ்வாய், ராகு, சனி போன்ற கிரகங்கள் ஏதோ ஒரு குறிப்பிட்ட இராசியில் இருந்தால் வரக்கூடியது. இன்றுகூட மாலை நேரங்களில் ஸ்ரீ வியாசராஜ மடத்து சுவாமிகள் தர்பார் என்னும் நிகழ்ச்சியை நடத்துவது இதன் அடிப்படையில்தான்.

ஒருமுறை கனகதாஸர் (வியாசராஜரின் சீடர் ஆவதற்கு முன்) வியாசராஜரை அணுகி தனக்கு மந்திரோபதேசம் செய்ய வேண்டும் என பிரார்த்தித்துக் கொண்டார். அதற்கு வியாசராஜர் உனக்கென்ன கோண மந்திரம் உபதேசிப்பது என்றார். கனகதாஸர் அதையே ஓர் மந்திரமாக எடுத்துக்கொண்டு "கோண - கோண" என்று தவம் செய்ய ஆரம்பித்துவிட்டார். கன்னடத்தில் கோண என்றால் எருமை என்று பொருள். நிஜமாகவே கனகதாஸரின் எதிரில் ஒரு எருமை வந்துநின்றது.

செய்வதறியாது கனகதாஸர் அந்த எருமையை வியாசராஜரிடம் அழைத்துச் சென்றார். அந்தப்பகுதியில் உள்ள ஏரியில் மிகப்பெரிய பாராங்கல் இருந்ததால் தண்ணீர் வராமல் இருந்தது. வியாசராஜர் அந்தப் பாராங்கல்லை நகர்த்த அந்த எருமையை பயன்படுத்திக் கொண்டார். அது இன்று கூட வியாச சமுத்திரம் என்ற பெயரில் இருந்து வருகிறது. முன் பிறவியில் இவர் பிரகல்லாதராகவும், பிறகு இவர் பாஹலிகராஜனாகவும், ஸ்ரீராகவேந்திரராகவும் அவதரித்தார். இவர் கன்னடத்தில் பகவத்கீதையை எழுதி இருக்கிறார். இப்பொழுது வியாசராஜர் மடத்து தலைமைப்பீடம் மைசூருக்கு அருகில் உள்ள திருமுக்கூடல் என்ற ஊரில் இருக்கிறது. இவரது பிருந்தாவனம் துங்கபத்திரா நதிக்கரையில் ஆனேகுந்தி என்ற ஊரில் இருக்கிறது. இவரது ஆராதனை பால்குண மாதம் கிருஷ்ணபக்ஷ சதுர்த்தி அன்று வருகிறது. இன்றைய வியாசராஜ மடத்து மடாதீசர் ஸ்ரீவித்யாவாசஸ்பதி தீர்த்தர் ஆவார்.





# ஸ்ரீ வாதிராஜர்

(கி.பி. 1480 - 1600)

தபோ வித்யா விரக்தியாதி ஸத்குணௌகா கரானஹம் |
வாதிராஜ குருன்வந்தே ஹயக்ரீவ தயாச்சிரயான் ||

கர்னாடகா மாநிலம் தென் கன்னட மாவட்டம் உடுப்பி -குந்தாபூர் சாலையில் உள்ள ஹூவினகரே என்பதுதான் வாதிராஜரின் பிறந்த ஊர். இவர் கௌரம்மா - இராமாச்சார் என்ற தம்பதியினருக்கு கி.பி. 1480ல் பிறந்தார்.

இராமாச்சார் - கௌரம்மா என்ற தம்பதியினருக்கு புத்ர சந்தானம் இல்லாமல் இருந்தது. ஆகவே கும்பாசியில் முகாமிட்டிருந்த ஸ்ரீவாகீச தீர்த்தர் என்பவரிடம் சென்று யோசனை கேட்டனர். அவர் மந்திராக்ஷதை கொடுத்து எல்லாம் நல்லபடி ஆகும் என்று ஆசீர்வதித்து அனுப்பி வைத்தார். தம்பதிகள் மௌனம் சாதித்து அங்கேயே நின்று

கொண்டே இருந்தனர். ஸ்வாமிகள் புரிந்து கொண்டு உங்களுக்கு நிச்சயம் குழந்தை பாக்கியம் உண்டு. ஆனால் குழந்தையை மடத்திற்கு ஒப்புவிக்க வேண்டும் என்று கூறினார். தாயார் ஒத்துக்கொள்ளாமல் தன் கணவருடன் அங்கேயே நின்று கொண்டிருந்தாள். அவர்கள் தயக்கத்தை புரிந்துகொண்ட சுவாமிகள் குழந்தை வெளியே பிறந்தால் மடத்திற்கும் உள்ளே பிறந்தால் நீங்களே எடுத்துக்கொள்ளுங்கள் என்று தம்பதியரை அனுப்பிவைத்தார். நாம் ஏதோ ஒன்று நினைக்கிறோம்; ஆனால் விதி வேறு விதமாக விளையாடுகிறது. எல்லாம் விதிப்படிதானே நடக்கும். அவர்கள் விஷயத்திலும் விதி விளையாடிவிட்டது.

ஆம் இராமாச்சார் ஒரு நாள் வீட்டில் உணவு அருந்திக்கொண்டிருந்தார். மனைவி கௌரம்மா பக்கத்தில் இருந்து கொண்டு உணவு பரிமாறிக்கொண்டிருந்தார். திடீரென்று புழக்கடையில் ஏதோ சத்தம் ஒன்று கேட்டது. ஆர்வத்தினாலும், ஆவலினாலும் உந்தப்பட்ட கௌரம்மா புழக்கடை பக்கம் ஓடோடி வந்தாள். அங்கேயே அந்த அம்மாளுக்கு பிரசவ வலி எடுத்தது. அதே இடத்திலேயே அவள் அழகான ஓர் ஆண் குழந்தையை பெற்றெடுத்தாள். வீட்டிற்கு வெளியே பிறந்ததனால் குழந்தையை ஒப்பந்தப்படி சுவாமிகளிடம் ஒப்படைத்தார்கள். பகவானுக்கு அபிஷேகம் செய்த பாலை உட்கொண்டு குழந்தை நாளொரு மேனியும் பொழுதோர் வண்ணமுமாக அது வளர்ந்து வந்தது. 7 வயது ஆகும்போது வாகீசதீர்த்தர் குழந்தைக்கு உபநயனம் செய்வித்தார். ஒருமுறை ஒருதட்டில் பழங்கள், தின்பண்டங்கள், சிலபுத்தகங்கள் இவைகளை வைத்து உனக்கு எது வேண்டுமோ அதை எடுத்துக்கொள்ளலாம் எனக் கூற குழந்தை புத்தகங்களை கையில் எடுத்துக் கொண்டது. இதிலிருந்தே வாதிராஜரின்

இலக்கிய ஆர்வமும் இலக்கியப் பசியும் நமக்குப் புரிகிறது அல்லவா? இவர் எழுதிய தீர்த்தபிரபந்தம் என்ற நூல் யாத்ரிகர்களுக்கு ஒரு வழிகாட்டியாக இருக்கிறது(Guide). பூனாவில் இருந்த கவிஞன் ஒருவன் சிசுபாலவதம் என்ற நூலை எழுதினான். அதைவிட சிறந்த காவியம் தன்னால் படைக்க முடியும் என்று கவிஞரிடம் சவால்விட்டு 12 நாட்களில் " ருக்மணீஸ விஜயம் " என்ற நூலை எழுதினார். இவர் கன்னடத்தில் எழுதிய லக்ஷ்மி சோபானே மிகவும் ப்ரசித்தி பெற்றது. யுத்தி மல்லிகா - பாரத லக்ஷாலங்காரம், மத்வாஷ்டகம், தசாவதார துதி, வைகுண்ட வர்ணனை போன்ற பல நூல்களுக்கு இவர் ஆசிரியர். இவர் ஒரு சிறந்த நிர்வாகி என்பதற்கு எடுத்துக்காட்டாக இரண்டு மாதத்திற்கு ஒருமுறை சுவாமிஜி மாறி மாறி உடுப்பி ஸ்ரீகிருஷ்ணனுக்கு பூஜை செய்வதை மாற்றி இரண்டாண்டிற்கு ஒருமுறை என்று பரியாய முறையை மாற்றி அமைத்த பெருமை இவருக்கு உண்டு. சோதேயில் திரிவிக்ரமஸ்வாமி கோவில் கட்டினார். பஸ், ரயில் போன்ற ஓர் வசதியும் இல்லாத காலத்திலேயே பாரத தேசம் முழுதும் சுற்றி மத்வமத சித்தாந்தங்களை பரப்பியும் துவைத சித்தாந்தத்தை நிலைநாட்டியும் வந்திருக்கிறார். இவர் ஒரு முறை திருப்பதிக்குச் சென்றிருக்கிறார். திருப்பதிமலை சாலிக்ராமமாக அவருக்கு காட்சி அளித்தது. ஆகவே காலால் நடக்காமல் முழுங்காலினாலேயே மலை ஏறிச் சென்று ஸ்வாமி தரிசனம் செய்திருக்கிறார். கண்டகி நதியிலிருந்து கொண்டு வந்த சாலிக்ராமங்களை மாலையாக்கி அதை ஏழுமலையானுக்கு சமர்ப்பித்தார். அந்த மாலையை நாம் இன்றும் கூட காணலாம். இவர் பிரதிதினமும் ஹயக்ரீவம் நைவேத்தியமாக வைத்து பூஜை செய்து (கடலைப் பருப்பு - வெல்லம் - தேங்காய் 3ம் வேகவைத்தது) ஒரு தட்டில் நைவேத்தியத்தை வைத்து தன் தலைமீது

வைத்துக் கொள்வாராம். பகவான் ஸ்ரீ ஹயக்ரீவ ரூபத்தில் வந்து தனது இரண்டு கால்களையும் வாதிராஜரின் தோள்களில் வைத்துக் கொண்டு நைவேத்தியத்தை ஸ்வீகரித்துக் கொள்வாராம். ஒருநாள் ஒரு சில விஷமிகள் இதில் விஷம் கலந்து வைக்க குதிரை மயக்கத்தினால் கீழே விழ குளதேகாய் என்று சொல்லக்கூடிய ஒரு வித கத்தரிக்காயை (வாதிராஜகுள) வேகவைத்து குதிரையை மீட்டார். லாதவ்யர் என்ற குஜுகணத்தை சேர்ந்த இவர்தான் அடுத்த கல்பத்தில் வாயு பகவானாக அவதரித்து நமக்கெல்லாம்அருளாசி வழங்கப் போகிறார். சோதே என்பது கார்நாடகம், வடகன்னட மாவட்டம் சிர்சியிலிருந்து 10 கி.மீ.ல் இருக்கிறது. அங்கே தான் இவரது மூலபிருந்தாவனம் இருக்கிறது. இவரது ஆராதனை நாள் பால்குண மாதம் கிருஷ்ணபக்ஷம் திரிதியை ஆகும்.





# ஸ்ரீ விஜயீந்திரர்

பக்தானாம் மானஸாம்போஜ பானவே காமதேனவே |
நமதாம் கல்பதரவே ஜயீந்திர குரவே நம: ||

ஸ்ரீமன் மத்வாசார்யாருக்குப் பிறகு அந்த பீடத்தை அலங்கரித்த 14வது ஸ்வாமிகள் ஸ்ரீ விஜயீந்திரர் ஆவார். இவருடைய குரு முனித்ரயர்களில் ஒருவரான ஸ்ரீவியாசராஜர் என்றால் இவரைப் பற்றி நாம் ஒன்றும் அதிகமாக கூறவேண்டாம். இவர் ஒரு சகலகலாவல்லவர். ஆயகலைகள் 64ம் கற்றவர். 104 கிரந்தங்களின் ஆசிரியர் ஆவார். ஜெயதீர்த்தருக்குப் பின் மத்வமதத்தின் தூணாக இருந்தவர். இவர் வியாசராஜரிடம் சீடராக இருந்தபோது இவரது அறிவாற்றலைக்கண்டு வியந்து சுரேந்திர தீர்த்தர் என்பவர் இவரை ஸ்ரீராகவேந்திர மடத்திற்கு ஸ்வீகாரமாகப் பெற்று அவருக்கு உரிய நேரத்தில் ஆஸ்ரமம் தந்தார். இவர் வியாசராஜர் - வாதிராஜர் - புரந்தரதாஸர் இவர்களின் சமகாலத்தவர். இவர் கும்பகோணத்தில் இருந்த

லிங்கராஜு என்பவரை வாதத்தில் வென்றார். இவர் தஞ்சை மன்னருக்கு மிகவும் வேண்டியவராக இருந்தார். தன்னிடம் சவால்விட்ட ஜோஷி என்பவருக்காக ஒரு பதக்கம் செய்து அதை ஊர்மக்களுக்குக் காட்ட அவர்கள் விஜயீந்தரர் செய்த பதக்கம்தான் சிறந்தது என்று கூறினர். தீபகி இராகத்தை வடநாட்டு வித்வான் ஒருவனிடம் பாடிக்காட்ட அவன் வியந்துபோனான். அம்ருதவர்ஷணி ராகத்தைப் பாடி மழையை வரவழைத்தார்.

அப்பைய தீக்ஷிதர் என்ற அத்வைதியை பல முறை வாதத்தில் வென்றார். இவர் ஆஸ்ரமம் தந்தது ஸ்ரீ சுதீந்திரதீர்தருக்கு. ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் மந்திராலய மஹான் ஸ்ரீராகவேந்திரரின் குரு ஆவார். இவரது பிருந்தாவனம் குடந்தையில் (கும்பகோணம்) உள்ள சோலையப்பன் தெருவில் உள்ளது. இன்றும் கூட இவர் பிருந்தாவனத்தில் இருந்து கொண்டே பல பக்தர்களுக்கு அருளாசி வழங்குகிறார். இவருடைய ஆராதனை நாள் ஜேஷ்ட பகுள திரயோதசி ஆகும்.





# ஸ்ரீ ரகூத்தும தீர்த்தர்

(கி.பி. 1548 - 1596)

பாவபோதக்ருதம் ஸேவே ரகூத்தும மஹாகுரும் ।
யச்சிஷ்ய சிஷ்ய சிஷ்யாத்யா : டிப்பண்யாசார்ய ஸம்ஜ்ஞதா ॥

இவரது அவதாரஸ்தலம் ஆந்திராவில் உள்ள ஸ்வர்ணவாடி என்பதாகும். இவருடைய தாயார் கங்குபாய் - தந்தையார் சுப்புபட்டர். ரகுவர்யதீர்த்தர் மத்வாசார்யார் பரம்பரையில் வந்த சிறந்த யதிஸ்ரேஷ்டர் ஆவார். அவர் ஒரு நாள் ஸ்வர்ணவாடிக்கு வருகிறார். சுப்புபட்டரும் கங்குபாயும் அவரை பிக்ஷைக்கு வரும்படி அழைக்கிறார்கள். ஆனால் இந்த தம்பதியினற்கு புத்ரசந்தானம் இல்லை என்பதை அறிந்த சுவாமிகள் குழந்தைகள் இல்லாத வீட்டில் பிக்ஷை ஏற்பது இல்லை என்று வர மறுத்துவிடுகிறார். சுப்புபட்டர் மிகவும் கெஞ்சியதால் அதை ஒப்புக்கொண்ட சுவாமிகள் கூடிய சீக்கிரம் அந்த தம்பதியினருக்கு புத்ர சந்தானம் உண்டாகும் என்றும், பிறந்த குழந்தையை மடத்திற்கு கொடுத்துவிட வேண்டும் என்றும் கூறுகிறார். தம்பதிகள்

இதற்கு ஒப்புக் கொண்டனர். கி.பி. 1548ல் கங்குபாய் ஒரு அழகான ஆண்குழந்தையை பெற்றெடுத்தார். அந்த குழந்தை பூ ஸ்பரிசம் இல்லாமல் தங்கத் தாம்பாளத்தில் பிறந்தது. அதற்குத் தாய்ப்பால் இல்லை. ஸ்ரீ மூலராமனுக்கு அபிஷேகம் செய்த பால்தான் அதற்கு ஆகாரம் ஆயிற்று. குழந்தைக்கு 7 வயது ஆகும் போது உபநயனம் செய்யப்பட்டது. அவருக்கு 8 வயது ஆகும் போது ரகூத்துமர் என்ற பட்டம் சூட்டப்பட்டு சன்யாசி ஆஸ்ரமம் வழங்கப்பட்டது. காலக்கிரமத்தில் ரகூத்துமருக்கு சன்யாசி ஆச்ரமம் வழங்கிய ஸ்ரீ ரகுவர்ய தீர்த்தர் பிருந்தாவனஸ்தரானார். விதி எப்படி எல்லாம் விளையாடுகிறது என்பதற்கு ஸ்ரீ ரகூத்துமரின் வாழ்க்கையில் ஏற்பட்ட சம்பவம் ஓர் உதாரணம் ஆகும்.

ஆத்யம் வரதாச்சார் என்பவர் ஸ்ரீ ரகூத்தமருக்கு பாடம் சொல்லிக் கொடுப்பதற்காக நியமிக்கப்பட்டவர். ஒரு நாள் அந்த ஊரில் இருந்த மிகப் பெரிய பணக்காரன் ஒருவன் ஸ்ரீ ரகூத்துமரை உணவு அருந்த கூப்பிடுகிறார். ஆனால் ஸ்ரீரகூத்துமர் செல்ல சிறிது கால தாமதம் ஆயிற்று. அதற்குள் அவசரப்பட்டு அந்த பெரிய மனிதன் ஆத்யம் வரதாச்சார் சொல்படி அந்த இருவரும் மற்றவர்களும் உணவு அருந்த முற்பட்டுவிட்டனர். ரகூத்துமர் அங்கே சென்றார். அவர்கள் சாப்பிடுவதைக் கண்டார். தான் சாப்பிடாமல் அப்படியே திரும்பி விட்டார். தனக்கு ஏற்பட்ட அவமானத்தை நினைத்து மனம் புழுங்கினார். அன்று இரவே அவருடைய கனவில் ரகுவர்யர் உருவில் கடவுள் தோன்றி அவருடைய நாக்கில் பீஜாக்ஷரம் எழுதினார். மறுநிமிடமே ஸ்ரீ ரகூத்துமர் ஒரு வேத விற்பன்னர் ஆனார். அவருடைய சீடர்களுக்குத் தானே பாடம் சொல்லிக் கொடுத்தார். அதிலும் அவர் சுதா சொல்லிக்கொடுக்கும்போது மறைந்து நின்று பார்த்த

ஆத்யம் வரதாச்சாருக்கு ஆச்சர்யமாக இருந்தது. மிகவும் கஷ்டமான பொருளைக் கூட மிகச் சாமர்த்தியமாக நன்றாக பொருள் புரியும்படி அவர் கூறியது வரதாச்சாருக்கே வியப்பாக இருந்தது. ஒருநாள் ஸ்ரீ ரகூத்துமர் சாலை வழியே செல்லும்போது கள்வர்கள் இவரிடம் உள்ளதை அபகரிக்க எண்ணி அவரிடம் நெருங்கியபோது அவரைச் சுற்றிலும் ஓர் அக்னி ஜ்வாலை இருப்பதைக் கண்டு அஞ்சி ஓடிவிட்டனர். இவர் பூஜை செய்யும்போது அஷ்டதிக் பாலகர்களும் அருகில் இருப்பார்களாம். இவரே தென்மேற்குத் திசையின் அதிபரான நிருதி என்ற அஷ்டதிக் பாலகர்தான். இவருக்கு மற்றொரு பெயர் ஸ்ரீ பாவபோதர். இவருடைய பிருந்தாவனத்திற்கு ஒரு விசேஷம் உண்டு. அது வெயிலில் காயும், மழையில் நனையும். யாரும் ஒரு கூரை கூடப் போடக்கூடாது என்பது அவரின் எண்ணம். இவரின் பிருந்தாவனம் பெண்ணாற்றங்கரையில் மணம்பூண்டியில் (திருக்கோவிலூர்) தமிழ்நாடு மாநிலம் விழுப்புரம் மாவட்டத்தில் இருக்கிறது.

இவரது ஆராதனை நாள் புஷ்ய சுக்லபக்ஷ ஏகாதசி அன்று வருகிறது. 3 நாட்கள் நடைபெறும் ஆராதனையின் போது பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட பக்தர்கள் கலந்து கொண்டு சிறப்பிக்கிறார்கள்.





# ஸ்ரீ ராகவேந்திரர்

(கி.பி. 1596-1671)

பூஜ்யாய ராகவேந்த்ராய ஸத்யதர்ம ரதாயச I
பஜதாம் கல்பவ்ருக்ஷாய நமதாம் காமதேனவே II

தமிழகத்தில் தென்ஆற்காடு மாவட்டம் புவனகிரிதான் ஸ்ரீ ராகவேந்திரரின் அவதார ஸ்தலம். புவனகிரி என்பது தென் ஆற்காடு மாவட்டம் சிதம்பரத்திற்கு அருகில் உள்ளது. ஸ்ரீ ராகவேந்திரரின் பெற்றோர்கள் திம்மண்ணபட்டர் - கோபிகாம்பா. ராகவேந்திரரின் இயற்பெயர் வேங்கடநாதன்.

ராகவேந்திரர் தன் அண்ணன் அண்ணியுடன் கும்பகோணம் வந்தார்கள். சுதீந்திரரை தரிசித்தார்கள் - சுதீந்தரரின் ஆணைப்படி அவர்கள் கும்பகோணத்திலேயே தங்கினார்கள். வேங்கடநாதன் படிப்பில் மற்ற

மாணவர்களைக் காட்டிலும் படு சுட்டியாக இருந்தான். அவனது ஆற்றலைக்கண்டு சுதீந்தரர் மிகவும் சந்தோஷப்பட்டார். ஆனால் சகமாணவர்களோ பொறாமையும், துவேஷமும் கொண்டிருந்தனர். இந்த நிலையில் சுதீந்திரருக்கு உடல் நிலை சரியில்லாமல் போயிற்று. மூலராமன் அவரது கனவில் தோன்றி வேங்கடநாதனுக்கு ஆஸ்ரமம் கொடுக்க ஆணை பிறப்பித்தார். அதன்படி வேங்கடநாதனுக்கு ஆஸ்ரமம் கொடுத்து ஸ்ரீராகவேந்திரர் என அவரை அழைக்கலாயினர். அவருக்கு குருராஜர் - பரிமளாச்சாரியர் என்ற பெயர்களும் உண்டு. திம்மப்பா என்றால் திருப்பதி ஏழுமலையான்; ராகப்பா என்றால் ராகவேந்திரர் ஆவார். ராகவேந்திரர் சன்யாசி ஆனது அவரது மனைவிக்குப் பிடிக்கவில்லை. அந்தப் பெண்மணி கிணற்றில் விழுந்து தற்கொலை செய்து கொண்டார்.

ஸ்ரீராகவேந்திரர் செய்த மஹிமைகளைப்பற்றி ஆராய்வோம். தன் சீடன் ஒருவன் தனக்கு மணமாக ஆசீர்வதிக்குமாறு கேட்டுக்கொள்ள ராகவேந்திரர் ஒரு பிடி மண்ணை அள்ளிக் கொடுக்க அதை அவன் பக்தியால் எடுத்துச்சென்றான். அந்த மண்ணை எடுத்துக் கொண்டு ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்துக் கொண்டான். அந்த வீட்டுப் பெண்மணி அன்றுதான் பிரஸவித்திருந்தாள். அந்த குழந்தையைக் கொல்ல ஒரு பிரம்மராக்ஷஸன் உள்ளேவர யத்தனித்தான். ஆனால் ராகவேந்திரர் கொடுத்த மண் அந்த பிரம்மராக்ஷஸனை உள்ளே வரமுடியாமல் தடுத்தது. குழந்தையும் பிழைத்தது. அந்த வீட்டில் இருந்த பெண்ணை இவனுக்கு பேசிமுடித்து திருமணம் நடைபெற்றது.

ஒரு வீட்டில் ஏதோ விசேஷம், சந்தனம் அரைக்க ஆள் இல்லை. அந்த வீட்டிற்குரியவன் சும்மா நிற்கும்

வேங்கடநாதனைக் கூப்பிட்டு சந்தனம் அரைத்துக் கொடுக்கச் சொல்ல வேங்கடநாதன் அக்னி ஸூக்தம் சொல்லியவாறு சந்தனத்தை அரைக்க அந்த சந்தனத்தை பூசிக்கொண்டவர்கள் எல்லாம் உடல் எரிவதாகச்சொல்லி அமர்களம் செய்தனர். பிறகு விஷயம் தெரிந்து வேங்கடநாதரின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டனர். மாடு மேய்த்துக்கொண்டு இருந்த சாதாரண வெங்கண்ணாவை தன்னுடைய அபாரசக்தியினால் ஒரு திவானாக்கினார். முகலாய மன்னன் ஒருவன் இவரை சோதிக்க நினைத்து ஒருகூடை நிறைய மாமிசம் அனுப்பினான். ஆனால் ராகவேந்திரர் இதை அறிந்து கொண்டு தன்னுடைய கமண்டலத்திலுள்ள நீரை தெளிக்க அது அறுசுவை உள்ள பழங்களாக மாறியது. அல்சர்-அபெண்டிசிடிஸ் என்று கூறிய வியாதியஸ்தர்களை ஆபரேஷன் இல்லாமல் குணமாக்கிய பெருமை இவரையே சாரும். இப்படியே சொல்லிக்கொண்டே போகலாம் இவர் செய்த மகிமைகளை. தனது அனுக்ரஹத்தால் திவான் ஆன வெங்கண்ணா மூலம் ஹைதராபாத் நவாபினால் தனக்கு இனாமாக அளிக்கப்பட்ட மஞ்சாலம்மா வாசம் செய்யும் இடத்தை மந்த்ராலயமாக மாற்றினார். தான் முன் பிறவியில் பிரகலாதனாக இருந்து யாகம் செய்த இடமான அதே இடத்தில் பிருந்தாவனஸ்தராகி பிருந்தாவனத்தில் இருந்தபடியே தன்னை அண்டிவரும் பக்தர்களுக்கு கேட்டதை எல்லாம் கொடுக்கும் காமதேனுவாக, கற்பகவிருக்ஷமாக இருந்துகொண்டு இருக்கிறார். ஆந்திராவில் பிறந்து தமிழகத்தில் ஓகோ.. என்று ரகூத்துமர் இருக்க; தமிழகத்தில் பிறந்து ஆந்திராவில் மட்டும் அல்லாது இந்தியா பூராவும், இல்லை இல்லை அகில உலகத்திலும் பேரும் புகழும் அடைந்திருக்கிறார் ஸ்ரீராகவேந்திரர்.

# ஸ்ரீ யாதவர்யரு

திரிவிக்ரம பண்டிதாச்சார், நாராயண பண்டிதாச்சார் போன்றே கிரகஸ்தாஸ்ரமத்தில் இருந்துகொண்டே உயர்ந்த நிலையை அடைய முடியும் என்று எடுத்துக் காட்டியவர்தான் யாதவர்யர். இவருடைய இயற்பெயர் யாதப்ப நாயக். இவர் பீஜப்பூர் மாவட்டம், இண்டிதாலுக்கா, மன்னார் கிராமத்தில் பிறந்தவர். இந்த ஊர் கிருஷ்ணா நதியின் கிளையான பீமா நதிக்கரையில் உள்ளது. இவரது தொழில் வட்டி வியாபாரம். இவர் வட்டி வசூல் செய்ய செல்லும் போதெல்லாம் நரசிம்மர் மேல் ஒரு சுலோகம் சொல்லிக்கொண்டே போவாராம். நான்கு காவலாளிகள் இவரை தொடர்ந்து வருவாராம். கொள்ளைக்காரர்கள் அதிகம் இருந்தக் காலம் அந்தக்காலம். யாதவர்யர் வெளியே செல்லும்போது கொள்ளையர்கள் இவரை தாக்க முயற்சிக்கும்போது காவலாளிகள் நான்கு பேர்கள் இருப்பதைக் கண்டு அவர்கள் அஞ்சி போய்விடுவார்களாம். யாதவர்யருக்கு இது தெரியாது. பிறகு இது தெரியவந்தபோது திருடர்களுக்கு காட்சி அளித்த கடவுள் தனக்கு காட்சி அளிக்கவில்லையே என்று ஏங்கிய நாட்கள் பல.

அமைதியை நாடி வீட்டிற்குச் செல்வார். ஆனால் வீட்டில் அமைதி கிடைக்காது. ஒரு நாள் மனைவியிடம் வெளியே செல்வதாகக் கூறி காசிக்குச் சென்று விட்டார். அங்கு மத்வமத சாஸ்திரங்கள் எல்லாம் கற்றார். பிறகு ஊர் திரும்பினார். யாதவர்யர் பண்டரிபுரம் சென்று குருராஜாச்சார் என்பவரை சந்தித்து அவரை பாகவதம் படிக்கச் சொல்வாரம். இவரது பேச்சை அவர்

உதாசீனப்படுத்தினார். பிறகு யாதவர்யர் மறைவிற்குப் பிறகு பாகவதம் படித்து அதன் மகிமைகளைக் கண்டு வியந்தாராம்.

யாதவர்யரு யக்குண்டி என்ற இடத்திற்கு வந்து அங்கு ஒரு அரச மரத்தடியில் அவருக்கு இடம் கிடைத்தது. அங்கு பித்ருஹள்ளி ஸ்ரீனிவாசாச்சார் மற்றும் 8 சீடர்கள் கிடைத்தார்கள். அந்த 8 சீடர்களுக்கும் பாடம் சொல்லிக் கொண்டு காலம் கழித்து வந்தார். தனக்கும் தன் சீடர்களுக்கும் வேதவியாசர் விக்ரஹம் தயார் செய்துகொடுத்தார். அதில் ஒரு விக்ரஹத்தில் ரத்தக் கசிவு ஏற்பட்டது. பிறகு பகவான் அவரது கனவில் தோன்றி 108 முறை சுதா பாராயணம் செய்தால் ரத்தக் கசிவு நிற்கும் எனக் கூறினார். யாதவர்யர் 108 முறை சுதா பாராயணம் செய்து ரத்தக் கசிவை நிறுத்தினார். ஒரு நாள் ஸ்வாமி நைவேத்தியத்திற்கும் ஏதும் இல்லாமல் இருக்கவே தன் சீடர்களிடத்தில் ஆற்று மணலைக் கொண்டுவரச் சொல்லி அந்த மணல் மீது நீரை பிரோக்ஷணம் செய்ய அந்த மணல் அருமையான ரவாகேசரியாக மாறியது. அதை சுவாமிக்கு நைவேத்தியம் செய்தார். இவர் கராவலம்ப ஸ்தோத்திரம் போன்ற ஒரு சில நூல்களை இயற்றி இருக்கிறார். யக்குண்டியிலேயே இவர் பிருந்தாவனம் உள்ளது. இவரது ஆராதனை பாத்ரபத சுக்லபக்ஷ பௌர்ணமியன்று வருகிறது.



# ஸ்ரீ சங்கர்ஷண ஒடையரு

(கி.பி. 1810 - 1862)

கர்னாடகா மாநிலம் தார்வார் நகரம் - அங்கு ஒரு மிகப்பெரிய பணக்காரர் இருந்தார். அவருக்கு புத்ர சந்தானம் இல்லாமல் இருக்கவே அவரது தாயார் ஹொளேஹொன்னுவில் உள்ள உத்திராதிமடத்தை சேர்ந்த சத்திய தர்மருக்கு சேவை செய்து 2 மகன்களை ஈன்றார். அதில் ஒருவன் திம்மண்ண நாயக் என்பவர் ஆவார். அவர்தான் இந்த அத்தியாயத்தின் கதாநாயகன் ஆவார். பரத்வாஜ கோத்திரத்தில் உதித்தார். ஆம் சங்கர்ஷண ஒடையரின் பூர்வாஸ்ரமப் பெயர் திம்மண்ணன் என்பதாகும். திம்மண்ணன் சிறு வயது முதல் சந்தியாவந்தனம், தேவருபூஜை, ஏகாதசி உபவாசம் போன்றவற்றில் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தார். திம்மண்ணனுக்கு 20 வயது ஆகும்போதே அவரது மனைவி மறைந்தாள். மிகவும் வேதனை அடைந்து உடுப்பிக்குச் சென்றார். அங்கு சோதே மடத்து ஸ்ரீ விஸ்வபிரியதீர்த்தரிடம் மாத்வ சாஸ்த்திரங்கள் அனைத்தும் படித்தார். அந்த சமயம் ஸ்ரீ உத்திராதிமடத்து சுவாமிகள் சற்று நொடிந்துபோய் இருந்தார். கட்டாய சூழ்நிலையின் பேரில் மடத்தில் உள்ள விலை உயர்ந்த பொருட்களை அடகு வைத்து திம்மண்ணனின் சகோதரர் ராமண்ணனிடம் பணம் பெற்றுக்கொண்டார். ஒரு நாள் உத்திராதிமடத்து சுவாமிகள் பூஜை செய்யும் போது ராமண்ணனிடம் மண்டபம் இல்லாமல் பூஜை செய்வது என்னவோ போல் இருக்கிறது என்றார். தான் சஞ்சாரம் மேற்கொள்ள இருப்பதாகவும் தன்னோடு யாரையேனும் அனுப்பிவைத்தால் பணம் திருப்பிக்கொடுக்க ஏற்பாடு செய்வதாகவும் கூறினார். திம்மண்ணன் தானே

செல்வதாகக் கூறி சுவாமிகளுடன் புறப்பட்டுச் சென்றார். பிறகு தான் கல்வி கற்ற சுவாமிகளுக்கு குருதட்சணை கொடுக்க வேண்டியதற்காக மடத்தில் ஒரு நாள் ஆகும் சிலவை தானே ஏற்றுக்கொண்டார். தனது அண்ணன் ராமண்ணாவிற்கு ஒரு கடிதம் எழுதி அதில் சுவாமிகள் முழுப்பணமும் கொடுத்துவிட்டதாகக் கூறினார். பிறகு ராமண்ணனும் திம்மண்ணனும் சந்தித்துப் பேசி தனது பாகத்தை சுவாமிகளுக்கு கொடுத்துவிட்டதாகக் கூறி இருக்கிறார். சங்கர்ஷணஒடையர் மாத்வர்களுக்குச் செய்த மிகப்பெரிய உபகாரம் யாதெனில் கன்னடசுதா என்று எல்லோராலும் பாராட்டப்பட்ட ஸ்ரீகனகதாசரின் ஹரிகதாம்ருத ஸாரத்திற்கு ரகசியார்த்தம் எழுதியதுதான். ஆராதனை 3 நாட்கள் சுவாமிகளுக்கு சாப்பாடு நைவேத்தியம் - மற்ற நாட்களில் நெல் பொறிதான் நைவேத்தியம். இவர் ருத்ராம்சம் ஆவார். இவரது பிருந்தாவனம் திருவண்ணாமலை மாவட்டம் போளூருக்கு அருகில் செய்யாற்றங்கரையில் உள்ள கரம்பூண்டியில் இருக்கிறது. இவரது ஆராதனை மார்கசீர்ஷ சுத்த பஞ்சமி ஆகும்.

சத்தியபராயண தீர்த்தரால் திம்மண்ண நாயக், சங்கர்ஷண ஒடையரு என்று பட்டம் சூட்டப்பட்டார்.



# ஸ்ரீ சத்திய போதர்

அடுத்து நாம் காண இருப்பது சாவனூர் முனிவரைப் பற்றி. சத்திய போதர் என்ற பெயருடைய இவர் உத்திராதி மடத்தின் மடாதீசராக இருந்தது கி.பி. 1743 முதல் கி.பி. 1784 வரை. இவர் குமரி முதல் காஷ்மீர் வரை சென்று மத்வமத கொள்கைகளை பரப்பினார். சத்திய போதரின் வாழ்க்கையும் இந்திய அரசியலும் பின்னிப் பிணைந்தது. அந்த அளவிற்கு இவரிடம் இந்து ராஜாக்களும், முகம்மதிய நவாப்புகளும், மராட்டிய பேஷ்வாக்களும் மரியாதை வைத்திருந்தனர். தன்னுடைய தபோவலிமையால் அனைவருமே இவருக்கு மண்டியிட்டு காத்திருந்தனர். 40 ஆண்டுகள் வேதாந்த சாம்ராஜ்ஜியத்தை ஆட்சி செய்த ஸ்ரீ சத்திய போதரின் காலத்தில் உத்திராதி மடம் பெயரும் புகழும் அடைந்திருந்தது. அதன் புகழ் உச்சாணி வரைக்கும் போய்விட்டது. வடகர்னாடகத்தில் உள்ள ராய்சூரில் ரகுனாதாச்சார் என்று பிரசித்த பெற்ற அந்தணர் ஒருவர் இருந்தார். இவருடைய பிள்ளை ஹரியாச்சார். ஒரே பிள்ளை. தந்தையைப் போலவே பிள்ளையும் சாஸ்திர சம்பிரதாயங்களில் சிறந்து விளங்கினார். ஹரியாச்சாருக்கு 4 பிள்ளைகள் இருந்தாலும் தன் கனவு ஈடேற ஒரு பிள்ளையை வேண்டி அகோபில ஸ்ரீநரசிம்மரை வேண்டிக்கொண்டார். அகோபில ஸ்ரீநரசிம்மர்தான் ரகுநாதாச்சார், ஹரியாச்சார் போன்றவர்களின் குலதேவரு. நரசிம்மர் அவருடைய வேண்டுதல்களை பூர்த்தி செய்தார். கி.பி. 1710ல் அவருக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அந்த குழந்தைக்கு ராமா என்று பெயர் சூட்டினார்கள். பெற்றோர்கள் உரிய நேரத்தில் வேண்டிய சம்ஸ்க்காரங்களை செய்தார்கள். குழந்தைக்கு 7 வயது

ஆகும்போது உபநயனம் செய்வித்தார்கள். இன்று ராமன் (ராமாச்சார்) காவ்யா, வியாகர்ணம், நியாய வேதாந்த, தர்க்கசாஸ்த்திரத்திலும் அனைத்திலும் புலமை பெற்றிருந்தார். ஹரியாச்சார் அவருடைய பிள்ளையைப் பற்றி ஓர் கனவு கண்டிருந்தார். அதற்கு வேண்டி அவரை ஓர் குருமடத்தில் சேர்க்க விரும்பினார். பிள்ளையை அழைத்துக் கொண்டு ஏழுமலையானை தரிசிக்க திருப்பதி வந்தார். திருப்பதியில் கொஞ்ச நாட்கள் தங்கினார். திருப்பதிக்கருகாமையில் உத்திராதி மடாதிபதி விஜயம் செய்திருந்தார். மூத்த சுவாமிகளான அவர், ஓர் இளைய சுவாமிகளுக்கு ஆஸ்ரமம் கொடுத்திருந்தார். மூத்தவர் பெயர் சத்திய விஜயரு. இளையவர் பெயர் சத்தியபிரியர். சத்திய பிரியருக்கு ராமாசார் மேல் ஓர் கண் இருந்தது. எந்த ஒரு சன்யாசிக்கும் அவருக்குப்பிறகு அந்த பீடத்தில் அமர்ந்து அந்த மடத்தை நிர்வகிக்கும் பொறுப்பு யாருக்கு இருக்கிறது என்று யோசனை செய்வார். சத்தியபிரியரும் இதற்கு விலக்கு அல்ல. ஒவ்வொரு முறையும் ஹரியாச்சார் சுவாமிகள் முன் வந்து ராமனைஅழைத்துகொண்டு நான் போகிறேன் என்று சொல்லும்போதெல்லாம் சத்தியபிரியர் இன்னும் கொஞ்சம் நாள் இங்கேயே இருங்கள் என்று சொல்வார். ஒரு நாள் சுவாமிகள் ஹரியாச்சாரை கூப்பிட்டு ராமன் மடத்திலேயே இருக்கட்டும், நீ போப்பா என்றார். ராமனும் தந்தையிடம் அவரை மட்டும் போய்வா; நான் மட்டும் மடத்தில் இருக்கிறேன் என்று கூறினான். இப்பொழுது சத்தியபிரியர் ராமாச்சாருக்கு (ராமனுக்கு) நியாய சுதாவை கற்பித்து சுதா மங்களம் செய்வித்தார். கிரிஜாதேவி என்ற பெண்ணை ராமாச்சாருக்கு மணமுடித்துக் கொடுத்தார். சத்தியபிரியர் ஆந்திரா - மகாராஷ்டிரா - தென்னிந்தியா போன்ற இடங்களுக்கு திக் விஜயம் செய்து துவைத மத சித்தாந்தத்தைப் பரப்பினார். சத்தியபிரியரின்குருவான சத்திய விஜயர் ஆரணிக்கருகில்

சித்திரை மாதம் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி அன்று பிருந்தாவனஸ்தரானார். இப்பொழுது சத்தியபிரியர்தான் உத்திராதிமடத்தின் மடாதிபதி. இவர் போகுமிடமெல்லாம் மரியாதைகள். ஒருநாள் சத்தியபிரியர் ராமாச்சாரை அழைத்து நீங்கள்தான் மூலராமனை பூஜிப்பதற்கான தகுந்த ஆள். நீங்கள் சன்யாசி ஆவதற்கான சகல அருகதைகளும் உள்ளன எனக் கூறினார்.

22-3-1743ல் ராமாச்சாருக்கு சன்யாஸ ஆஸ்ரமம் கொடுத்து அவருக்கு சத்தியபோதர் என்று பட்டத்தையும் கொடுத்தார். சத்தியபிரியர் 26-3-1743ல் கண்ணனூரில் பிருந்தாவனஸ்தரானார். சத்திய போதர் முதல் வேலையாக சத்திய பிரியருக்கு மானாமதுரையில் பிருந்தாவனம் கட்டி தனது குருகளுக்கு பூஜை செய்தார். இவர் போகாத ஊரே இல்லை எனலாம். தஞ்சை - குடைந்தை - ஸ்ரீரங்கம் - திருச்சி - ராமேஸ்வரம் - ஆரணி - புவனகிரி - வேலூர் - சோளிங்கபுரம் என்று பல ஊர்களுக்குச் சென்று மத்வரின் கொள்கைகளை பரப்பினார். பல மத்வ அறிஞர்கள் இவரிடம் மத்வசாஸ்திரங்கள் படித்தார்கள். ஹரிதாசர்களான விஜயதாஸ், கோபால்தாஸ், ஜெகன்னாததாஸ் போன்றவர்கள் இவருடைய சமகாலத்தவரே. ஜகன்னாததாஸ் ஹரிகதாம்ருத ஸாரத்தை எழுதி ஒரு பித்தளை தாம்பாளத்தில் வைத்து ஸ்ரீ சத்தியபோதரிடம் கொடுக்க அவர் அதை ஸ்ரீமூலராமனுக்கு அர்ப்பணம் செய்தார். பதிலுக்கு சத்தியபோதர் ஜகன்னாததாசருக்கு சாய்ந்துகொள்ள ஒரு மணை கொடுத்தார். இன்றும் கூட பித்தளை தாம்பாளம் சாவனூர் உத்திராதி மடத்திலும், மணை மான்வியிலும் காணலாம். சத்திய போதரை தரிசித்து ஜகன்னாததாசர், "நாதன்ய நாதே இந்து சத்திய போதராயர திவ்விய பாத பதுமவகண்டு" என்று பாடினார். சத்தியபோதரின்

சிஷ்யர்கள் 4 பேர் உத்திராதிமடத்து சுவாமிஜி ஆனார்கள்.

**அவர்கள் வருமாறு:**

1. சத்திய சந்தரு
2. சத்தியவர தீர்த்தரு
3. சத்தியதர்மரு
4. சத்தியசங்கல்பரு

சத்தியபோதரு பால்குண கிருஷ்ணபக்ஷ பிரதமை சாவனூர் என்ற இடத்தில் பிருந்தாவனஸ்தரானார்.

**இவரது மகிமைகள்:**

பைராம்கான் என்பவன் சாவனூர் நவாபிடம் வேலை செய்த இன்னொரு முஸ்லீம். அவன்ஒரு வீடு கட்டினான். ஆனால் அந்த வீட்டிற்கு குடிபோக முடியவில்லை. காரணம் அந்த வீட்டில் மிகப்பெரிய பாம்பு ஒன்று வசித்து வந்தது. வீட்டுக்குரியவன் சத்தியபோதரிடம் தஞ்சம் புகுந்தான். சத்தியபோதர் அந்த வீட்டில் மூலராமனை பூஜித்தார். முதல் இரண்டு நாட்களும் அந்த பாம்பு வந்து பூஜையை ரசித்து, பிறகு மறைந்தது. மூன்றாவது நாள் பாம்பு பேசலாயிற்று. இந்த அறையில் 7 ஜாடி தங்கம் புதைக்கப்பட்டிருக்கிறது. அதில் பாதியை மடத்திற்கும், பாக்கி உள்ள பாதியில் அரை பாகம் அந்தணர்களுக்கும், மீதி உள்ள அரை பாகம் இந்த வீட்டுக்காரர் அனுபவிக்கட்டும் என்று கூறியது. எல்லோரும் இதற்கு சம்மதிக்கவே அந்த பாம்பும் வீட்டைவிட்டுப் போயிற்று.

மடத்தில் உள்ள ஒரு சில விஷமிகள் இவரை வசைபாடி தூற்றினார்கள். தொன்று தொட்டு வரும் ஆச்சார அனுஷ்டானத்திற்கு இவர் ஓர் எதிரி என்றும், காரணம் இவர் இரவில் உண்பவர் என்று கூறினார்கள். சத்திய போதர் அன்று இரவு பூஜையை முடித்துகொண்டு சுவாமி

பெட்டியை வைக்கவேண்டிய இடத்தில் வைத்து ஒரு சிறுவனை கூப்பிட்டு மடத்தில் உள்ளவர்களுக்கு ஆகாயத்தைக் காட்டு என்றார். அன்று அமாவாசை, எங்கு பார்த்தாலும் கும்மிருட்டு. சிஷ்யன் காண்பித்த திசையில் அனைவரும் பார்க்கிறார்கள். என்ன ஆச்சர்யம்! சூரியன் தன் ஒளி கிரணங்களை வீசி பளிச்சென்று காட்சி அளித்தான். தன்னுடைய தபோ வலிமையால் இரவிலும் சூரியனைக் காட்டிய மகான் சத்தியபோதர். இவரை நினைத்தாலே நாம் அன்றாடம் செய்யும் பாவங்கள் போகும்.

வாழ்க சத்தியபோதர் நாமம்.



# ஸ்ரீ சத்தியக்ஞானர்

கர்னாடகா மாநிலம் ராய்ச்சூர் மாவட்டம் கொப்பல் என்ற ஊருக்கருகில் கின்னல் என்ற ஊரில் தங்கூரி குடும்பம் என்ற ஒரு குடும்பம் வசித்து வந்தது. ஜீவுபாய் - கிருஷ்டாச்சார்யா என்ற தம்பதிகள் கின்னல் கிராமத்தில் வசித்து வந்தனர். அப்போது உத்திராதி மடம் சத்திய தீரர் என்பவரின் ஆளுகைக்கு உட்பட்டு இருந்தது. இராமாயணமும் பாகவதமும் தண்ணீர்பட்ட பாடாக இருந்தது. தினமும் ராமாயண உபன்யாசமும் பாகவத உபன்யாசமும் நடைபெறும். தார்வார் மாவட்டம் டாபேல் என்ற ஊரில் சுவாமிஜி திக்விஜயம் செய்திருந்தார். அவருடைய கனவில் அந்த வீட்டின் சுவற்றில் ஒரு ஸ்ரீராம விக்ரஹம் இருக்கிறது என்று தெரிந்து அதை அவர் எடுத்துக்கொண்டு சீதை உருவத்திற்காக அவர் என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டு இருக்கையில் அன்று இரவே அவருக்கு மீண்டும் கனவில் உடுப்பியில் உள்ள மத்வ சரோவரத்தில் சீதையை எடுத்துக்கொள் என்று உத்தரவு பிறப்பித்தது. இரண்டையுமே கின்னல் கிராமத்தில் இன்னும் பூஜிக்கப்படுகிறது. நம்முடைய கதாநாயகனுக்கு ஜெயாச்சார் என்று பெயர் சூட்டப்பட்டது. காரணம் ஜெயதீர்த்தர் மல்கேடாவில் பிருந்தாவன பிரவேசம் செய்த தினத்திலேயே இவர் பிறந்தார். இவருடைய தாய்க்கு இவர் 5வது குழந்தையாக அவதரித்தார். எல்லோருக்கும் ஆவது போலவே இவருக்கு 8வது வயதில் உபநயனம் ஆயிற்று.ஜெயாச்சார் மடத்தில் இருந்துகொண்டே சேதுராமனிடம் மத்வ சாஸ்திரங்கள் எல்லாம் படித்தார். ஜெயாச்சார் எப்பொழுது பார்த்தாலும் படிப்புதான். ஆசார சீலராக திகழ்ந்தார்.லௌகிக விஷயம் எதிலும் நாட்டம் இல்லாமலும் குரு பக்தி அதிகம்

உள்ளவராகவும் திகழ்ந்தார். ஜெயாச்சாருக்கும் ஜீவுபாய் என்ற பெண்ணுக்கும் விவாகம் நடந்தது. இப்பொழுது ஜெயாச்சார் ஓர் ஆண் குழந்தைக்கு தந்தை. ஜெயாச்சாருக்கு கின்னலில் உள்ள தன் தாயை பார்க்க ரொம்பவும் ஆசையாக இருந்தது. போய் பார்த்துவிட்டு ஆத்கூர் என்ற இடத்திற்கு வந்தார்.அங்குதான் உத்திராதிமடம் இருந்தது. ஒருநாள் சத்தியதீரர் வழக்கம்போல வேதவியாசர் பூஜை முடித்துவிட்டு மலர்களை சுவாமி மேல் போடுவதற்கு கொடுத்துக் கொண்டே வரும்போது ஜெயாச்சாரிடம் மலர்கள் கொடுக்கும்போது கூர்ம சாலிக்கிராமமும் இவருடைய கையில் சிக்கியது. சத்தியதீரருக்கு வயதாகிவிட்டது. நாளுக்கு நாள் அவர் உடல் நிலை மோசமடைந்தது. அவருக்கு பிறகு உத்திராதி மடத்தை நிர்வகிக்க போவது யார்? மூலராமனை பூஜிக்கப் போவது யார்? என்ற கேள்விக்குறி சத்தியதீரருக்கு எழுந்தது. எல்லோரும் சேர்ந்து ஜெயாச்சாருக்கு சன்யாசாஸ்ரமம் கொடுக்க நிச்சயிக்கப்பட்டது. இப்பொழுது ஜெயாச்சார் சத்தியக்ஞானர் என்ற பெயருடன் சன்யாஸாஸ்ரமம் ஏற்றார். சத்தியதீர தீர்த்தரு ஜேஷ்ட கிருஷ்ணபக்ஷ நவமி அன்று பிருந்தாவனஸ்தரானார். ராய்ச்சூரில் சாதுர்மாஸ்யத்தை முடித்துக் கொண்டு சத்திய ஞானர் திருப்பதிக்குச் சென்றார். எக்ஸிகூடிவ் ஆபிசரும் மற்றவர்களும் மரபுப்படி அவரை வரவேற்றார்கள்.

சுவாமிஜி கோவிந்தராஜரையும், கோதண்டராமனையும் தரிசித்து மலை ஏறி வந்தார். இவர் வந்ததைகூடப் பார்க்காமல் கதவு போடப்பட்டது. ஏழுமலையானுக்கு உள்ளே அலங்காரம் நடந்து கொண்டே இருந்தது. ஒவ்வொரு முறை திலகம் வைக்கும்போதும் அது கீழே விழுந்துவிடும். பட்டர் எவ்வளவோ முயற்சி

செய்து பார்த்தார். முடியவே இல்லை. எல்லோரும் ஏதோ தவறு செய்துவிட்டார்களா என்று கேட்டனர். இல்லை என்று ஒரே பதில்தான் எல்லோரிடத்திலிருந்தும் வந்தது. சுவாமிகள் தன்னை உள்ளே விடவில்லை. ஆதலால்தான் திலகம் கீழே விழுந்து விடுகிறது என்றார். சுவாமிகள் உள்ளே போக அனுமதி வழங்கப்பட்டது. அவர் உள்ளே சென்று ஏழுமலையானைத் தரிசிக்கும்போது திலகம் இருந்தது. பிறகு அங்கிருந்தவர்களெல்லாம் சுவாமிஜியின் தபோவலிமையைக் கண்டு வியந்தார்கள். ஒரு நாள் சுவாமிஜி மான்வியில் சாதுர்மாஸ்யத்தை முடித்துக் கொண்டு மூலராமனை பூஜித்தார். அன்று சுவாமிஜியின் பூஜை சற்று தாமதமாக நடந்தது. அனைவரும் கேட்டனர், ஏன் தாமதம் செய்கிறார் என்று. அதற்கு சுவாமிஜி ஜகன்னாததாசர் ஒரு தேவரநாமாவை பாடிக்கொண்டே இருக்கிறார். அந்தப் பாடல் முடியும் மட்டும் நான் மூலராமனை பூஜிக்கப்போவதில்லை என்றார். ஒரு நாள் கூர்ம சாலிக்கிராமம் பூஜிக்கும்போது அதற்கு பால் போடப்பட்டது. அந்த பாலைக் கண்ட சுவாமிகள் இந்த பால் வேண்டாம், இதற்கு முன் இது உபயோகப்படுத்தியது என்றார். எல்லோரும் இல்லை என்று சாதித்தனர். அந்த வீட்டு மருமகள் ஒத்துக்கொண்டாள். தன் குழந்தைக்கு கொஞ்சம் பால் அதிலிருந்து எடுத்ததை சுவாமிகள் ஞான திருஷ்டியால் இதை கண்டுபிடித்தார். யக்குண்டிக்கு சென்று யாதவர்யரோடு பேசுவார். பல ஆண்டுகளுக்கு முன்பு காலமான யாதவர்யரும் இவரும் சுதா சர்ச்சையில் ஈடுபாடு கொள்வார்கள். அடுத்து இவர் பிரயாணம் உடுப்பியை நோக்கி- உடுப்பியில் அப்போது பர்யாய சுவாமிஜியாக அதமார் மடத்தை சேர்ந்த ஸ்ரீவிபுதபிரிய தீர்த்தர் என்பவர் இருந்தார். அவரும், ஊர் பிரமுகர்களும், கோவில் நிர்வாகிகளும் வந்து சுவாமிகளை கையைப்

பிடித்து அழைத்துச் சென்றனர். ஆனால் சுவாமிஜிக்கு ஏதோ ஒரு அவமரியாதை செய்துவிட்டனர். அதை பொறுக்காத சுவாமிகள் கனகனகிண்டி வழியாக கிருஷ்ணனை தரிசித்துவிட்டு உத்திராதி மடத்திற்கு செய்று விட்டார். கிருஷ்ண மடத்தில் பரியாய சுவாமியான அதமார் சுவாமிஜி விபுதபிரியர், ரகுபிரிய தீர்த்தர், பாலிமார் மடம் மற்றும் கிருஷ்ணாபுரம் மடத்தைச் சேர்ந்த வித்யாபூர்ண தீர்த்தரும் இருந்தார்கள். மாலையில் ரதம் அலங்கரித்து அதில் கிருஷ்ணனை உட்காரவைத்து ரதம் புறப்பட்டது. வந்துகொண்டே இருந்த ரதம் உத்திராதி மடம் வந்ததும் நின்றுவிட்டது. தேர் நகர்வதற்கு பல முயற்சிகள் எடுக்கப்பட்டன. பிறகு பலரும் உத்திராதி மடத்திலும் சுவர்மிகளுக்கு ஏதோ அவமரியாதை நடந்திருக்கிறது. அதனால்தான் தேர் உத்திராதி மடம் வந்து நின்றுவிட்டது என்று கூறினார்கள். பரியாய சுவாமிகள் கேட்டுக் கொண்டதின் பேரில் தேர் உத்திராதி மடத்திலிருந்து நகர்வதற்கு உத்திராதி மடத்து சுவாமிகள் ஸ்ரீ கிருஷ்ணனை பிரார்த்தித்தார். தேர் நகர்ந்தது. பிறகு இவர் யாரிடம் பாடம் படித்தாரோ அந்த சேதுராமனுக்கு ஆஸ்ரமம் கொடுத்து அவரை சத்திய தியானர் என்று பட்டம் சூட்டினார். இவர் மாசி மாதத்தில் சுக்லபக்ஷத்தில் ஏகாதசி அன்று பிருந்தாவனஸ்தரானார்.

இன்று கூட சத்தியக்ஞானர் கோதாவரியில் குளித்து சென்னையில் போஜனத்தை முடித்துகொண்டு மல்கேடாவில் பாடம் படிக்கிறார் என்றுதான் கூறுகிறார்கள். இவருடைய மூலபிருந்தாவனம் ஆந்திராவில் உள்ள ராஜமுந்திரியில் இருக்கிறது. மிருத்திகா பிருந்தாவனம் சென்னையில் இருக்கிறது. சத்தியக்ஞானருக்கும் சத்தியதியானருக்கும் பாம்பு ரூபத்தில் அடிக்கடி ஜெயதீர்த்தர் வந்து ஞாபகப்படுத்திப் போவார். உடனே இவர்கள் மல்கேடா சென்று விடுவார்கள்.

# ஸ்ரீ சத்திய தியானர்

கர்னாடகத்திலுள்ள பிஜாப்பூருக்கு அருகாமையில் அமைந்ததுதான் சிக்கோடி என்ற அழகிய கிராமம். அந்த ஊரில் கொர்லஹள்ளி ஜெயாச்சார் என்ற ஒர் அந்தணர் இருந்தார். இவர் மாத்வா வகுப்பை சேர்ந்தவர். இவருக்கு 7 பெண்களும் 1மகனும் இருந்தார்கள். மகன் வெகு சீக்கிரத்திலேயே காலன் வசம் போய்விட்டான். ஆண்டவன் அருளால் அவருக்கு மற்றொரு குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு சேதுராமன் என்று பெயரிட்டனர். சேதுராமன் பிறக்கும் போதே வியாதியஸ்தனாகப் பிறந்தான். அந்த வீட்டில் உள்ள பெண்கள் எல்லாம் சேதுராமனை நோக்கி கேலியும் கிண்டலுமாக இருந்தார்கள். அப்போது திடீரென்று ஒரு மாத்வ அந்தணர் தோன்றினார். அந்த அந்தணர் கூறினார், நான் பிரசித்தி பெற்ற மருத்துவர். பெரிய சோதிடரும் கூட. உன் குழந்தை உடல் நிலை சரியில்லை என்று கேள்விபட்டு நான் இங்கு வந்தேன் என்றார். தந்தை தன் புதல்வனை அவரிடம் காண்பித்தார். வந்தவர் குழந்தையின் முகத்தில் மற்றும் உடம்பையும் தடவிக் கொடுத்து உன் மகன் இனிமேல் நல்ல ஆரோக்கியத்துடன் இருப்பான். அவன் பெரியவன், ஆனால் மிகப் பெரிய ஆளாக வருவான். இன்னும் சொல்லப் போனால் மத்வரின் மூல சமஸ்தானத்தை அலங்கரிக்கப் போகிறான். தந்தையின் ஆனந்தத்திற்கு அளவே இல்லை; மட்டற்ற மகிழ்ச்சி கொண்டார். அந்தணருக்கு ஏதாவது கொடுக்கலாம் என்று நினைத்து அந்தணரை தேடினார். எங்குமே கிடைக்கவில்லை. பிறகுதான் தெரிந்தது அந்தணர் உருவில் வந்தவர் வேறு

யாருமில்லை, ஆஞ்சநேயர்தான் என்று. சேதுராமனுக்கு வாயு பகவானின் அருள் கிடைக்கும் என்று உறுதியுடன் பெற்றோர்கள் நம்பினார்கள். இப்பொழுது சேதுராமனுக்கு 8 வயது, அவரது பெற்றோர்கள் அவருக்கு உபநயனம் செய்தார்கள். ஜெயாச்சார் தனது வறுமையையும் பொருட்படுத்தாமல் சிறுவர்களுக்கெல்லாம் வித்தியாப்பியாசம், மத்வசாஸ்திரங்களைச் சொல்லிக் கொடுத்தார். உத்திராதிமடத்தில் சத்தியவர தீர்த்தர் என்பவர் குருவாகி இருந்தார். மிகவும் புலமையை உடையவர். அவர் கொர்லஹள்ளி ஜெயாச்சாருக்கு ஆஸ்ரமம் கொடுத்து சத்தியதீரர் என்ற பட்டமும் கொடுத்தார். புலமைமிக்க சேதுராமாச்சார் பண்டிதர்களிடத்திலும், மத்வ விற்பன்னர்களிடமும் சாஸ்த்திர சர்ச்சைகள் பல செய்துகொண்டு வந்தார். மகான் சத்தியதீரரின்ஆராதனை கார்த்திகை மாதத்தில் துவாதசி அன்று நடக்கும். ஏதோ கோர்ட் வேலையாக சேதுராமன் ஹைதராபாத் சென்றார், ஹைதராபாத்தில் சேதுராமன் ஆராதனை அன்று அந்தணர்களுக்கு கொடுப்பதற்காக 100 சால்வைகளை வாங்கினார். பண்டிதர்களுக்காக வாங்கிய சால்வைகளை மடத்தில் சேர்க்கும்படி சொல்லிவிட்டு அவர் மட்டும் சிறிது நாட்கள் ஹைதராபாத்திலேயே தங்கினார். அன்று இரவு மடத்து ஜனங்களெல்லாம் சாப்பாட்டை முடித்துக் கொண்டு இருந்தனர். சுவாமிஜி தனக்கென்றுஒதுக்கப்பட்ட அறையில் ஒய்வு எடுத்துக் கொண்டு இருந்தார். அந்த மடத்தில் சமையல் கலைஞர் ஒருவர் இருந்தார். ராஜப்பா என்று பெயருடையவர். 1000 பேர்களுக்கும் காலை 11 மணிக்கு சாப்பாடு தயார் என்று சொல்லக் கூடியவர். அவர் தயங்கித் தயங்கி சுவாமிகளிடம் வந்தார். சுவாமிகள் காலில் விழுந்தார். அவர் கூறலானார்;

சுவாமிஜி எனக்கு சம்பளம் கொடுக்கிறார்கள். உண்ண உணவும் இருக்க இடமும் கொடுக்கிறார்கள். ஆனால் எனக்கு ஒரே ஆசை; அதையும் தாங்கள்தான் தீர்த்து வைக்கவேண்டும் என்றார். ராஜப்பாவின் பீடிகையை கேள்வியுற்று சுவாமிஜி என்ன செய்ய வேண்டும் என்று கேட்கிறார். அதற்கு ராஜப்பா வேறு ஒன்றும் எனக்கு வேண்டாம். பண்டிதர்கள் போட்டுக்கொள்ளும் சால்வை ஒன்று தனது உடலை அலங்கரிக்க வேண்டும் என்றார். உடனே சுவாமிஜி இதற்குத்தான் இவ்வளவு குழைந்தாயா; பக்கத்து அறையில் 100 சால்வைகள் வண்ண வண்ணமாக இருக்கின்றன. உனக்கு எது இஷ்டமோ அதை எடுத்துக் கொள் என்றார். மிகவும் கஷ்டப்பட்டு ஒன்றைத் தேர்வு செய்து ராஜப்பா எடுத்துக் கொண்டான். இதை வேறு யாரிடத்திலும் கூறாதே என்று கூறினார். ஆனால் சால்வை போட்டுக் கொண்ட ஆசையில் ராஜப்பா மடத்தில் உள்ள அனைவருக்குமே காட்டி சுவாமிஜி கொடுத்தது என்று கூறிவிட்டான். அடுத்த நிமிடம் சுவாமிஜி முன்னால் ஒரு மிகப் பெரிய நீண்டதொரு வரிசை நிற்கத் தொடங்கியது. இப்போது சேதுராமன் ஹைதராபாத்திலிருந்து அனுப்பிய எல்லா சால்வைகளும் சமயல்காரர், பறிமாறுபவர், மடத்தில் வேலைசெய்யும் எல்லாருடைய தோள்களிலும் அலங்கரித்துக் கொண்டு இருந்தன. சேதுராமன் ஹைதராபாத்திலிருந்து திரும்பி வந்தார். மடத்தில் வேலை செய்யும் ஒவ்வொரு ஆளும் தன் தோள் மீது ஒரு சால்வையை போட்டுக் கொண்டு இங்குமங்குமாக திரிந்து கொண்டிருப்பதை பார்த்தார். தந்தையும், சுவாமிஜியும் ஆன சத்தியதீரரிடம் கேட்டார். சுவாமிஜி பிள்ளையிடம் இப்படிக் கூறினார். ஏழைகளை மதிக்க கற்றுக்கொள்; நம்முடைய அன்புக்கு அவர்கள்தான் அருகதையானவர். பண்டிதர்களுக்குக் காட்டும் பரிவும் பாசமும் இவர்களுக்கும் காட்டு. சேதுராமன் மனதில்

விதை விதித்தாய்விட்டது. தந்தையின் மூலம் பிற்காலத்தில் சேதுராமனே சத்திய தியானராகி அன்னதானம் செய்வதில் சிறந்து விளங்கினார். இவர் உத்திராதி மடத்தின் பீடாதிபதியாக இருந்தபோது இக்கட்டுரை ஆசிரியருக்கு 30 வயது இருக்கும். "முதுக்குரு சுவாமிகளு" என்று செல்லமாக அழைக்கப்பட்ட இவர் காலத்தில் உத்திராதி மடத்தில் ஏதாவது விசேஷம் என்றால் சென்னை, திருவல்லிக்கேணி சிங்கராச்சாரி தெருவில் உள்ள எல்லா கட்டிடங்களிலும் சாப்பாடு போடப்படும். காரணம் தந்தையாரின் பயிற்சி;அதனால்தான் இன்றளவும் கூட அவர் ஒவ்வொருவர் மனதிலும் வீற்றிருக்கிறார். சத்திய தீரருக்குப் பிறகு சத்தியக்ஞானரு அந்த பீடத்தை அலங்கரிக்கிறார். சத்தியதீரரும் சேதுராமனும் மல்கேடா சென்று அங்கு ஜெயதீர்த்தர் பிருந்தாவனத்துக்கு எதிரில் மூலராமனை பூஜிக்கிறார்கள். எங்கிருந்தோ பாம்பு ஒன்று வந்து பிருந்தாவனத்தைச் சுற்றிக் கொண்டது. பூஜையை ரசித்தவர்களெல்லாம் பயம் கொள்கிறார்கள். ஆனால் சேதுராமனும், சுவாமிஜியும் சற்றுகூட அசையாமல் தொடர்ந்து மூலராமனை பூஜை செய்துகொண்டே இருக்கிறார்கள். பாம்பு மறைந்து விட்டது. ஜெயதீர்த்தரே பாம்பு உருவில் வந்து சுவாமிகளுக்குத் தரிசனம் கொடுத்ததாகப் பேசிக்கொண்டார்கள்.

கி.பி.1911ல் சேதுராமன் சத்திய தியானரு என்ற பெயரில் ஆஸ்ரமம் பெற்றார். மத்வர்களுக்கு பொற்காலம் உதயமாகிவிட்டது. இவருடைய தலைமையில் மாத்வர்கள் நிம்மதியாக இருப்பார்கள். சன்யாசி ஆஸ்ரமம் எடுத்துக் கொண்டு முதல் வேலையாக காசிக்குச் சென்றார். அங்கே அறிவு பசிக்காரர்கள் ஆன்மிக விசாரத்தில் அதிகமாக ஈடுபாடு கொண்டவர்களும் வேதம் - உபநிஷத் போன்ற

சர்ச்சைகளில் அதிகமாக ஈடுபாடு கொள்வாரும் இருந்தனர். இவருடைய வாதத்திறமையைக் கண்டு அனைவரும் வியப்பிலாழ்ந்தனர். காசியில் சிவகுமார் மிஸ்ரா என்ற ஒர் அத்வைதி இருந்தார். அவரை வாதத்தில் வெல்வது என்பது அவ்வளவு சுலபமல்ல. அவரிடத்தில் தோற்காத ஆளே இல்லை எனலாம். அவரிடம் சென்று பேசுவதற்கே பயந்தவர்கள் ஏராளம் ஏராளம். சுவாமிகளுக்குச் சரியான ஆஸனம் மிஸ்ராவிற்கும் வழங்கப்பட்டது. லேசான திரையை தூக்கினார்கள். வாதப் பிரதிவாதங்கள் துவங்கப் போகின்றன. சுவாமிகள் முகத்தை மிஸ்ரா பார்த்தார். அவர் முகத்தில் இருந்த கல்விக்களை, தேஜோமயமான உருவம், அவருடைய முகமலர்ச்சி யாவையும் கண்ட சிவகுமார் மிஸ்ரா சுவாமிஜியிடம் சென்று தன்னுடைய தவறுகளுக்கெல்லாம் மன்னிப்புக் கோரினார். தன் தோல்வியை ஒப்புக்கொண்டார். இப்படித்தான் சுவாமிஜி சென்றவிடமெல்லாம் ஜெயபேரிகை கொட்டினார். துறவிகள் சாதுர்மாஸ்யத்திற்கு உட்காருவது என்பது ஒரு மரபு. அந்த மரபின்படி சத்தியதியானர் சாதுர்மாஸ்ய விரதம் இருந்து 4 மாதங்கள் எங்கே கழிப்பது என்று யோசனையில் இருந்தார். சுவாமிஜி பிஜாப்பூரையே தேர்ந்தெடுத்தார். திவான், பிஜாபூர் வறட்சியால் தவிக்கிறது. மழை இல்லை; அந்த ஊர் வேண்டாம் என்று கூறினார். சுவாமிஜி ஒரே பிடிவாதமாக பிஜாப்பூரே இருக்கட்டும், எல்லாம் ராமன் பார்த்துக்குவான் என்றார். மூலராமன் மேல் சுவாமிஜிக்கு அந்த அளவிற்கு நம்பிக்கை. பிஜாப்பூரில் சாதுர்மாஸ்யத்தை முடித்துக் கொண்டு சுவாமிஜி கோலாருக்கு புறபட்டு போனார். கோலாரில் கொஞ்ச நாள் தங்கி மூலராமனை பூஜித்துவிட்டு மகாலக்ஷ்மி வாசம் செய்யும் கொல்லாபூர் சென்றடைந்தார்கள். ஸ்ரீ சுவாமிகள்

தென்னாட்டில் பார்க்காத ஊர்களே இல்லை எனலாம். கடைசியில் பண்டரிபுரத்தில் சைத்ர சுக்ல சப்தமி அன்று பிருந்தாவனஸ்தரானார். Dr. நாகராஜசர்மா, BNK சர்மா போன்றவர்களெல்லாம் இவரது மாணாக்கர்களே. மாத்வஉலகின் ஜாம்பவான் என்று சொல்லப்படும் சுவாமிஜி மத்வ சித்தாந்த கொள்கை பிடிப்புள்ளவர்.

ஸ்ரீ சத்திய தியானர், தீர்த்த பிரசாதத்திற்கு அதிகமான ஜனங்கள் வரும் ஊரையே தேர்ந்தெடுப்பது வழக்கம்.





# ஸ்ரீ சத்திய பிரமோதர்

ஹாவேரி என்பது கர்னாடகத்தில் உள்ள ஓர் பெரிய ஊர். அதற்கு அருகாமையில் குட்டல் என்ற ஒரு அழகிய கிராமம்; அங்கே பல அந்தண குடும்பங்கள் வசித்து வந்தன. அவைகளில் ஒன்றுதான் குட்டல் குருராஜாச்சார் குடும்பமும். குட்டல் குருராஜாச்சாரின் இரண்டாவது மகன்தான் ரங்காச்சார் என்பவர். அவர் அந்த காலத்திலேயே B.A. படித்திருந்ததால் அவ்வூர் பள்ளியில் ஆசிரியராகப் பணி ஆற்றினார். தார்வாரில் இருந்த ஒருவர் ரங்காச்சார் என்பவர் பெண் கொடுக்க சம்மதித்தார். அவருடைய பெண் கமலாவை கொடுத்து ரங்காச்சார் திருமணம் நடந்தது. அவர்களுக்கு ஒரு மகன் பிறந்தான். பெயர் குருராஜன். மாத்வர்களில் ராகவேந்திரர் - குருராஜன் - ரகோத்துமன் என்ற பெயர்கள் மிக மிக அதிகமாக இருக்கும். குருராஜருக்கு பள்ளிப் படிப்பே கிடையாது. அவர் படித்ததெல்லாம் மணி மஞ்சரி, மத்வ விஜயம், தாத்பர்ய நிர்ணயம் போன்றவைகள்தான். உரிய நேரத்தில் அவருக்கு உபநயனம் ஆயிற்று. ரங்காச்சார் குருராஜனை அழைத்துக்கொண்டு உடுப்பிக்கு சென்று இன்னும் பல

மத்வசாஸ்திரங்களைப் படிக்கச் செய்தார். பிறகு ரங்காச்சாரிக்கு திருச்சானூரில் உள்ள சம்ஸ்கிருத பாடசாலையில் ஆசிரியராக வேலை கிடைத்தது. குருராஜனும் அந்தப் பாடசாலையில் சேர்ந்து நியாய வியாகர்ணம் - சாகித்யம் போன்றவற்றை படித்தார். முளுபாகல் மடாதீசரான பிராக்ஞநிதி தீர்த்தர் குருராஜனோடு படித்தவர்தான். குருராஜன் மேல் படிப்புக்காக மைசூர் சென்றார். சென்னையில் தர்க்க சிரோமணி முதல் வகுப்பில் தேறினார். தந்தையார் காலமானார். அவருக்குச் செய்யவேண்டிய ஈமச் சடங்குகளை தார்வாரில் செய்துவிட்டு மீண்டும் மைசூர் வந்தார். அங்கே உத்திராதி மடத்தில் ஒரு சம்ஸ்கிருத பாடசாலை கட்டப்பட்டது. அதற்கு குருராஜர் ஆசிரியராகச் சேர்ந்தார். அப்போது உத்திராதி மடாதீசராக இருந்தவர் சத்தியாபிக்ஞர். அவருக்கு நாளுக்கு நாள் உடல் க்ஷீணதசை அடைந்து வந்தது. அவருக்குப் பிறகு சன்யாஸாஸ்ரமம் யாருக்குக் கொடுப்பது என்று கேள்வி பூதாகாரமாக எழுந்தது. அவருக்குப் பிறகு அந்த மடத்தை நிர்வகிக்கும் பொறுப்பு குட்டல் குருராஜருக்குத்தான் என்று பலரது அபிப்ராயங்களாக இருந்தன. கடைசி நிமிடத்தில் சத்திய பிரமோதரின் குருவான சத்தியா அபிக்ஞர் தகுந்த ஆளைத்தேடி அவரிடம் மடத்தை ஒப்புவித்தார். குட்டல் குருராஜாச்சார் இப்பொழுது சத்திய பிரமோதர் ஆகிவிட்டார்.எல்லோரும் மிக சிறிய உருவமான இந்த ஆள் மடத்தை 3 மாதங்கள் கட்டிக் காப்பார் என்றார்கள். ஒவ்வொருவரும் ஆரூடம் சொல்ல ஆரம்பித்தார்கள். ஒரு சிலர் 1 வருடம்தான் தாக்கு பிடிப்பார் என்றார்கள். ஆனால் எல்லோருடையவாக்கும் பொய்க்கும் வண்ணம் சத்தியபிரமோதர் இந்த வேதாந்த சாம்ராஜ்யத்தை உத்திராதி மடாதீசராக 50 ஆண்டுகள் அலங்கரித்தார். அறிவின் ஊற்று சத்திய பிரமோதர்

என்றால் அது மிகையாகாது. கிரஹஸ்தர்களை அரவணைத்துக்கொண்டு போவது, சிறியவர்களிடத்தில் பிரியம் காட்டுவது எல்லாம் சத்தியதியானர் போல்தான் இவரும். அவருடைய குருகள் சத்திய தியானர், சத்திய அபிஞர், சத்திய பிரியர், சத்தியபோதர் எல்லோரிடத்திலும் அபார மரியாதை உடையவர்.

சத்திய பிரமோதர், ஜெயதீர்தர், ரகூத்துமர் இவர்கள் இருவர் பேரிலும் அதிக ஈடுபாடு கொண்டவர். அடிக்கடி மல்கோடாவிற்கும் திருக்கோயிலூருக்கும் சென்று விடுவார். ஐம்பதிற்கும் அதிகமாக மத்வ விற்பன்னர்கள் மத்வ சாஸ்திரம் படிக்க உறுதுணையாக இருந்திருக்கிறார். ஜெயதீர்த்த வித்யாபீட என்ற வித்யாபீடத்தை ஆரம்பித்து அதிலிருந்து பல மாத்வ அறிஞர்களை வெளியே கொண்டுவர ஏற்பாடு செய்திருக்கிறார். அவருடைய குரு சத்தியாபிக்ஞர் ஆராதனையை கர்நூலில் கொண்டாட வேண்டும் என்று பக்தர்கள் கேட்டு கொண்டார்கள். பண்டார்கரே மடத்தை சேர்ந்த வித்யாமான்யர், விஸ்வேசதீர்த்தர், ரகுபிரியதீர்தரு, வித்யாவல்லபரு என்று பல நதிகளின் சங்கமம் அங்கே நடைபெற்றது. வித்யாமான்யரை நோக்கி சத்திய பிரமோதர் கூறினார்; பெங்களூரிலிருந்து கர்னூலுக்கு இதற்காகவே வந்த உங்களை எவ்வளவு பாராட்டினாலும் போதாது என்று கூற, அவரோ இதில் கலந்துகொள்ள நான் கொடுத்துவைத்தவன்; இந்த மடம் என்னுடைய குருநாதரின் மடம் என்று கூறினார். இவருடைய முதல் சாதுர்மாஸ்ய விரதம் அனவட்டி என்ற ஊரில் நடந்தது.ஜெயதீர்த்தர் எழுதிய நியாயசுதாவை எத்தனை முறை அவர் படித்திருக்கிறார் என்று அவருக்கே தெரியாது. ஒரு முறை இவர் ராமேஸ்வரத்தில் குளிக்கும் போது கையில் ஏதோ கிடைத்திருக்கிறது. என்ன என்று பார்த்தால்

அது ஒரு சாலிக்கிராமம். பத்மநாப சுவாமியின் சாலிக்கிராமம்.சுவாமிஜி மற்ற சாலிக்கிராமத்தோடு அதையும் பல ஆண்டுகள் வைத்திருந்தார்கள். பிறகு அதை கூட்லி ஆர்ய அக்ஷோப்பிய மடத்தை சேர்ந்த ரகுப்பிரிய தீர்த்தருக்குக் கொடுக்க அந்த சாலிக்கிராமம் இன்றும் கூட கூட்லி மடத்தில் காணலாம். பல யதிகள் இவரிடம் மத்வ சாஸ்திரம் குறிப்பாக சுதா படித்திருக்கிறார்கள். இவருடைய 50 ஆண்டு சன்யாசத்தில் ஒரு நாள் கூட சுதா சொல்லி கொடுக்காமல் இருந்ததில்லை. அவருடைய இறுதி மூச்சு விடும்போது கூட அவர் சுதா பாடம் தன் சிஷ்யர்களுக்கு சொல்லிக் கொடுத்தார். கானியூர் மடாதிபதி வித்யாவல்லபதீர்த்தரு, சிறூர் லக்ஷ்மீவர தீர்த்தரு, பிராக்ஞநிதி தீர்த்தரு போன்றவர்கள் இவரிடம் படித்தவர்களே.

பாலிமார் மடத்தைச் சேர்ந்த ஸ்ரீ வித்யாமான்யர் பரியாயம்போது சத்திய பிரமோதரை அழைத்திருந்தார். அஷ்ட மடத்தைச் சேர்ந்த யதிகளும் ஆவலுடன் இவருடைய வருகையை எதிர்நோக்கி காத்திருந்தனர். இவர்தான் முக்கிய அதிதியாக அழைக்கப்பட்டிருந்தார். ஸ்ரீ வித்தியாமான்யர் ஸ்ரீ உடுப்பி கிருஷ்ணனுக்கு தங்கத்தினாலான தேர் செய்து கொடுத்திருந்தார். பிறகு சென்னையில் நடந்த அகில பாரத மாத்வ மகாமண்டலியின் தத்துவ ஞான சம்மேளத்தின் முக்கிய அதிதியாக பங்கேற்றார்.

இவருடைய 41வது சாதுர்மாஸ்ய விரதம் ஹொலெஹொன்னில் நடந்தது. இங்கேதான் ஸ்ரீ சத்திய தர்ம தீர்த்தரின் மூலபிருந்தாவனம் இருக்கிறது. இவருடைய சன்னிதானத்தில்தான் சாதுர்மாஸ்ய விரதம் இருந்தால்தான் தன் சீடர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கமுடியும் என்று எண்ணி அந்த ஊரையே தேர்ந்தெடுத்தார். கூட்லி ஆர்ய அக்ஷோப்பியதீர்த்தரும்,

சிறூர்மடாதிபதியும் அங்கேயே இருந்தார்கள். காலையில் சுவாமிஜி இவர்களுக்குப் பாடம் கற்பிப்பார். மாலை நேரங்களில் ஸ்ரீ சத்தியதர்மர் எழுதிய பாகவதத்தின் வர்ணனையை உபதேசிப்பார். ஸ்ரீ சத்தியபிரமோதர் 750வது மத்வஜயந்தியையும், ஸ்ரீ ஜெயதீர்த்தரின் 600வது ஆராதனையையும் பெங்களூர் நேஷனல் காலேஜ் மைதானத்தில் 3 நாட்கள் மிகவும் சீரும் சிறப்புமாக நடத்தினார். சத்திய பிரமோதரின் சீடர்கள் தங்கள் தங்கள் ஊரில் சாதுர்மாஸ்யம், மகாசமாராதனை இரண்டும் நடக்க வேண்டும் என்று விரும்பினார்கள். எல்லோருடைய விருப்பத்தையும் நடத்திடமுடியாது என உணர்ந்த சுவாமிகள் அத்தாணி என்ற இடத்தில் சாதுர்மாஸ்ய விரதமும், மகாசமாராதனையும் நடத்த விரும்பினார். மூன்று நாட்களும் மூத்த மாணாக்கர்கள் ஜெயதீர்த்த வித்யா பீடத்திலிருந்து அருமையான உபன்யாசங்கள், நியாயசுதா, தர்க்கதாண்டவா, சந்திரிகா, நியாயாம்ருத போன்றவற்றில் உபதேசிப்பார்கள்.

காலையில் ஏழு மணிக்கு ஆரம்பமான விழா இரவு வெகு நேரமாகியும் முடியாது. 3 நாட்களும் 70 ஆயிரம் பேர்கள் முத்ராதாரணத்திற்கும் தீர்த்தத்திற்கும் இருப்பார்கள். தினமும் 40 ஆயிரம் பேர்கள் சாப்பிட்டார்கள். இவர் பலரை வாதத்தில் வென்றிருக்கிறார். ஸ்ரீ சத்தியபிரமோதர் நியாயசுதாவை 35 தடவைகள் தன்னுடைய வெவ்வேறு சீடர்களுக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறார். 21 தடவை பிரம்ம சூத்திர பாஷ்யம் பல சீடர்களுக்குச் சொல்லி கொடுத்திருக்கிறார். தாத்பர்ய சந்திரிகா 10 தடவைகளும் தர்க்கதாண்டவ 6 முறையும் சொல்லிக் கொடுத்திருக்கிறார். இவர் ஆஸ்ரமம் எடுத்தபோது உத்திராதி மடத்தின் கஜானா காலியாக இருந்தது. ஆனால் இன்று இதன் சொத்து மதிப்பு பல

கோடியாக உயர்ந்துவிட்டன. இவர் பல நூல்களை எழுதி இருக்கிறார். நியாய சுதா மண்டனம், யுக்தி மல்லிகாவிவ்ருத்தி, விஜயீந்தர விஜய வைபவம். பாகவத நிர்தோஷத்துவ போன்ற பல நூல்களும் இன்னும் சில புத்தகங்களும் எழுதி இருக்கிறார். இவர் பண்டிட்குட்டல் சர்வங்க ஆசார்யா என்பவருக்கு சத்தியஆத்ம தீர்த்தர் என்று பட்டம் கட்டி 3-11-97ல் திருக்கோவிலூரில் பிருந்தாவனஸ்தரானார். இவரிடம் படித்தவர்கள் பலர் இன்று மிகப் பெரிய ஆளாக இருக்கிறார்கள். மாத்வர்கள் வீட்டில் இருக்கும் மாத்வபந்து ஆசிரியர் வட்டங்காடு ஹரியாச்சார் இவரது சீடர்தான். கௌலகி நாகராஜ சர்மா, கடப்பாவில் இருக்கும் கெட்கிருஷ்ணாசார்யா போன்றவர்கள் இவரது மாணவர்களே! இவர் ஆராதனை கார்த்திக சுத்த திருதியை நாளில் திருக்கோவிலூரில் ஸ்ரீ சத்தியாத்மர் தலைமையில் மிகவும் சிறப்பாக செய்யப்படுகிறது.





# ஸ்ரீ விஸ்வேச தீர்த்தரு

ஸ்ரீமன் மத்வாசார்யார் ஸ்ரீ கிருஷ்ணனை உடுப்பியில் பிரதிஷ்டை செய்து அவரை பூஜிப்பதற்காக 8 பால சன்யாசிகளை தேர்ந்தெடுத்து அவர்களுக்காக அஷ்ட மடங்களை நிறுவினார். அவைகளுள் ஒன்றுதான் அதோக்ஷித தீர்த்தரை முதல் குருவாகக் கொண்ட பேஜாவர் மடம். இதில் ஸ்ரீ விஜயத்வஜ தீர்த்தர், ஸ்ரீவிஸ்வதீர்த்தர் என்ற மகனியர்களின் வழிவந்தவர்தான் இன்றைய 32வது பீடாதிபதியாகத் திகழும் ஸ்ரீவிஸ்வேச தீர்த்த ஸ்ரீபாதங்களவர். இவருடைய இயற்பெயர் வெங்கட்ரமணா என்பதாகும். இவர் உடுப்பிக்கு அருகில் உள்ள ராமகுஞ்ச என்ற ஊரில் நாராயணாச்சார் - கமலம்மா என்ற தம்பதிகளுக்கு இரண்டாவது குழந்தையாக 24-4-1931ல் அவதரித்தார். வெங்கட்ரமணனுக்கு ஆறு வயதாகும் போதே அவனுடைய சுட்டித்தனம், புத்திகூர்மையையும் ஆச்சாரத்தில் ஈடுபாடும் கண்ட பேஜாவர் மட மடாதிபதிகள் விஸ்வமான்ய தீர்த்தர் அவருக்கு அடுத்தபடியாக அவனுக்குத்தான் பட்டம் கொடுக்கப் போவதாக சபதமேற்கொண்டார். வெங்கட்ரமணனுக்கு துங்கபத்ரா நதிக்கு அருகில் உள்ள

சக்ர தீர்த்தத்தில் 3-12-1938ல் சன்யாச ஆஸ்ரமம் கொடுக்கப்பட்டது. அன்று முதல் அவருக்கு ஸ்ரீ விஸ்வேச தீர்த்தரு என்று பெயர் சூட்டப்பட்டது. இவருக்கு ஆன்மிக சம்பந்தமான பாலபாடம் உடுப்பியில் மத்வசாஸ்திரங்களில் கரைகண்டவரும், மத்வர்களின் ஜாம்பவான் என்ற பெயர் பெற்றவருமான பண்டார்கரே பாலிமார் மடாதீசரான ஸ்ரீ வித்யாமான்ய தீர்த்தர் ஆவார். இவருடைய ஆன்மீக அறிவு ஒவ்வொருவராலும் பாராட்டப்பட்டது. மேற்கத்திய கலாச்சாரம் இந்தியாவில் பரவுவதைக் கண்டு இவர் கவலைப் பட்டதுண்டு. அகில பாரத மாத்வ மஹாமண்டலியை ஸ்தாபித்தவரும் இவரே. குல்பர்காவில் பஞ்சமும், பசியும் தலைவிரித்தாடிய போது அரசாங்கம் திட்டம் தீட்டுவதற்குள் செயல்பட ஆரம்பித்தவர் இவர் தான். சென்னை தியாகராய நகரில் ராகவேந்திரர் மடம் கட்டி ஆன்மீகத் துறையில் அளவில்லாத அக்கறை செலுத்தி தர்ம கார்யங்கள் செய்து வருகிறார். சென்னையைப் போலவே இந்தியாவின் தலைநகர் டில்லி - மும்பாய் - பதரி - குல்பர்க்கா - உடுப்பி - ராமேஸ்வரம் போன்ற இடங்களில் மடம் கட்டி ஸ்ரீராகவேந்திரஸ்வாமி பிருந்தாவனம் ஸ்தாபித்து தர்ம காரியங்களுக்கும், வைதீக காரியங்களுக்கும் இடம் கொடுத்து உதவுகிறார். பெங்களூரில் ஒரு இடத்தை விலைக்கு வாங்கி அங்கே வித்யாபீடம் ஆரம்பித்து 400 மாணவர்களுக்கு மேல் குருகுலவாசத்தின் அடிப்படையில் இலவச உணவு போடப்பட்டு எல்லா குழந்தைகளையும் அரவணைத்துச் சென்று தீபாவளி, பொங்கல் போன்ற பண்டிகை காலங்களில் ஊர்களுக்கு அனுப்பி அப்பிள்ளைகளுக்கு ஒரு கார்டியனாகத் திகழ்கிறார். அந்த வித்யாபீடத்திலே படித்து அங்கேயே ஆசிரியர்களாக பணி புரிகின்றனர் பலர். வடமொழிமாத்திரம் இல்லாமல் அங்கே ஆங்கிலமும் கற்றுத்தரப்படுகின்றன. வடமொழியில்

உள்ள பல முக்கியமான புத்தகங்கள் இந்திய மொழியில் பலவற்றில் மொழிமாற்றம் செய்யப்படுகிறது. இந்த வித்யாபீடத்தில் குடிசையில் வாழ்பவரையும் இந்திய பிரதமரையும் ஒரே கண்ணோட்டத்தில் சுவாமிஜி பார்க்கிறார். தலித் மக்களிடம் அளவு கடந்த பரிவும், பாசமும் காட்டுவார். 4 பரியாயங்களைக் கண்டவர். இவர் பெங்களூரில் இருந்தால் பிரதி தினமும் இவரைக் காண சினிமா, உலக பிரமுகர்கள், தொழிலதிபர்கள், அரசியல்வாதிகள் எல்லோரும் வருவார்கள். இவர் சிறந்த கர்மயோகி. இவருக்கு வயது 70 ஆனாலும் கூட 16 வயது பாலகனைப்போல் துள்ளிக்குதித்து காரியங்களில் ஈடுபடுவார். அன்னதானம் செய்வதில் இவருக்கு நிகர் இவரே.

இவருடைய பெயரையும், புகழையும் அடுக்கிக் கொண்டே போகலாம். இவர் வாழ்கிற காலத்திலேயே நாமும் வாழ்கிறோம் என்ற பெருமை நமக்கு நிச்சயம் கிடைக்கிறது.





# ஸ்ரீ புரந்தரதாஸர்

(கி.பி. 1484 - 1564)

மன்மனோபீஷ்ட வரதம் ஸர்வாபீஷ்ட பலப்ரதம் ।
புரந்தரகுரும் வந்தே தாஸஸ்ரேஷ்டம் தயாநிதிம் ॥

மஹாராஷ்டிர மாநிலம் புரந்தரகட் என்ற ஊரில் வரதப்பநாயக் என்ற ஒரு அந்தணர் இருந்தார். அவரது மனைவி பெயர் ரத்னாபாய். வைர வியாபாரம் செய்து வந்தார். இந்த தம்பதியினருக்கு குழந்தை பாக்கியம் இல்லாதால் திருப்பதி ஏழுமலையானை வழிபட்டு இவர்களுக்கு நாரதரே குழந்தையாக பிறக்கிறார். ஸ்ரீனிவாசனின் அருளினால் பிறந்த குழந்தைக்கு ஸ்ரீனிவாசன் என்று பெயர் இடுகிறார். பெயர் சூட்டும் விழாவை மிகவும் சீறும் சிறப்புமாக நடத்துகிறார். தன்னுடைய வியாபார உத்திகளையும் அண்டை மொழியையும் சீனப்பனுக்கு நன்கு கற்றுக்கொடுக்கிறார். காலாகாலத்தில் உபநயனம் செய்விக்கிறார். சரஸ்வதி என்ற பெண்ணையும் திருமணம் செய்துவைக்கிறார். காலக்கிரமத்தில் சீனப்பநாயக்கரின் பெற்றோர்கள்

மறைகின்றனர்.சீனப்பநாயகர் நவகோடி நாராயணர் என்ற பெயரில் வியாபாரத்தில் கொடிகட்டி பறக்கிறார். கஞ்சதனத்தில் இவரை மிஞ்சுபவரே இல்லை எனலாம். இவரிடம் தர்மகுணம், கடவுள் பக்தி எல்லாம் பார்ப்பது துர்லபமாகப் போயிற்று. இவருக்கு 3 ஆண்குழந்தைகளும் ஒரு பெண்ணும் பிறக்கிறது. ஒருநாள் திடீரென்று ஓர் அந்தணர் ஒரு சிறுவனை அழைத்துக் கொண்டு வந்து இவனுக்கு உபநயனம் செய்விக்க வேண்டும். தங்களால் ஆன பொருளுதவி செய்யவேண்டும் என்றார். சீனப்பநாயக் மறுநாள் அழைத்துவர சொன்னார். அந்தணர் மறுநாள் வந்தார். சீனப்பநாயக் அதற்கு அடுத்த நாள் வரச்சொன்னார். அந்தணரும் அலுக்காமலும் சளைக்காமலும் அவர் சொல்லியபடி எல்லாம் வந்தார். ஒரு நாள் சீனப்பநாயக்கன் அந்த நாட்களில் புழக்கத்தில் இருந்த செல்லாத தேய்ந்து போன காலணாவைக் கொடுத்தார். இந்தக் காலணாவைக் கொண்டு உபநயனம் செய்ய முடியுமா என்று கூட அவர் யோசிக்கவில்லை. உடனே அந்தணர் சீனப்பநாயக்கரின் மனைவியிடம் வந்து முறையிட்டார். பிறகு தினமும் தன்னை அலைக்கழித்ததாகவும் கடைசியில் செல்லாத காலணாவை விட்டெறிந்ததாகவும் கூறினார். அம்மா உன்னிடத்தில் ஏதாவது பணம் இருந்தால் கொடு என்றார். அந்த அம்மாள் தன்னிடத்தில் ஒன்றும் இல்லை என்று கூறவும் உன்னுடைய தாய் வீட்டில் சீதனமாக ஏதும் போட்டிருந்தால் அதை கூட தானமாக கொடுக்கலாம் என்கிறார். சரஸ்வதிக்கு திடீரென்று ஒரு யோசனை தோன்றுகிறது. தன் மூக்கில் போட்டிருக்கும் மூக்குத்தி தன் தாயார் போட்டதுதான். அதை கொடுத்து விடலாம் என்று யோசனை செய்து அந்த மூக்குத்தியை அந்தணருக்கு கொடுத்தார். இப்போது அந்தணர் தன்னை ஒரு வியாபாரி

போல் வேஷம் போட்டுக்கொண்டு சரஸ்வதிபாய் கொடுத்த மூக்குத்தியை எடுத்துக் கொண்டு சீனப்ப நாயக்கரிடம் வந்தார். அந்த மூக்குத்தியை கொடுத்து அதற்கு ஈடாக பணத்தைக் கேட்டார். சீனப்பநாயக்கர் அந்த மூக்குத்தியை மேலும் கீழும் பார்த்தார். அது தன்னுடைய மனைவியின் மூக்குத்தி போல் இருந்தது. தன்னுடைய மகன் மத்வபதியை கூப்பிட்டார்.(இவர்தான் பிற்காலத்தில் விஜயதாஸராக வரப்போகிறவர்) தான் இதுவரை அந்த வியாபாரியைப் பார்த்ததில்லை; அவர் கூடப் போய் அவர் எங்கு இருக்கிறார் என்று தெரிந்துகொண்டு வா என்று சொன்னார். சீனப்பநாயக்கர் வியாபாரியிடம் பிறகு வந்தால் பணம் கொடுக்கிறேன் என்று சொல்லி அவரை அனுப்பிவிட்டு மூக்குத்தியை தன்னுடைய பெட்டியில் வைத்து பூட்டிவிட்டு தன் வீட்டிற்குச் சென்றார். வீட்டிற்குச் சென்றதும் தன் மனைவியை கூப்பிட்டு மூக்குத்தி எங்கே ? கொண்டு வா என்றார். சரஸ்வதிக்கு கையும் ஓடவில்லை , காலும் ஓட வில்லை. திரு திரு என்று முழித்தார். உன்னைத்தான் கேட்கிறேன் மூக்குத்தியை கொண்டு வா என்று சற்று அதட்டலாக கேட்டார். சரஸ்வதி ஏதும் அறியாது பகவானை வேண்டிக் கொண்டாள். திரௌபதியை காத்தவனே, கஜேந்திரனை ரக்ஷித்தவனே என்னையும் காப்பாற்று என்று பகவானிடம் சரணாகதி அடைந்தார். மூக்குத்தி இருந்த கிண்ணத்தில் டங் என்று ஏதோ சத்தம் கேட்டது. கையை போட்டு கிண்ணத்தில் துழாவினாள் மூக்குத்திதான் தென்பட்டது. அதை எடுத்து தன் கணவரிடம் கொடுத்தாள். அந்தணர் கொடுத்த மூக்குத்தியும் தன் மனைவிகொடுத்த மூக்குத்தியும்ஒரே விதமாக இருப்பதைக் கண்டு வியப்பிலாழ்ந்து கடைக்கு ஓடினார். பெட்டியில் வைத்த மூக்குத்தியை பார்க்க ஆசையாக பெட்டியைத் திறந்தார். மூக்குத்தி

காணவில்லை, மனம் குழம்பி தவித்தது. மனைவியிடம் விஷயத்தை கேட்டார். மனைவி அந்தணர் வந்தது, நீங்கள் உதவி செய்யாதது, தன்னிடத்தில் யாசித்தது, கடைசியில் தாய்வீட்டு சீதனமாக கொடுத்ததை வேணும் என்று கேட்க தான் தன்னுடைய மூக்குத்தியை கழற்றி கொடுத்ததை கூறினாள். தன்னுடைய மகன் மத்வபதி வந்து தான் பார்த்தவரை அந்தணர் ஒரு கோவிலுக்குச் சென்று மறைந்ததை கூறினான். சீனிவாசநாயக் கூட்டி கழித்து பார்த்து வந்தவர் பாண்டுரங்கன்தான் என்று நிச்சயித்தபடி மனைவியிடம் தான் அந்த கணத்தில் நடந்து கொண்ட விதத்தையும் எல்லாம் கூறி எந்த ரூபத்தில் வந்து பகவான் யாசித்தாரோ அதே ரூபத்தில் தனக்கு காட்சி அளிக்க வேண்டும் எனக் கூறினார். ஆனால் பகவான் சீனிவாச நாயக்கிற்கு காட்சி அளிக்க மறுத்துவிட்டார். உன் கணவருக்கு இன்னும் ஆசாபாசங்கள் கொஞ்சமும் போகவில்லை. பிறகு காட்சி அளிக்கிறேன் என்று சரஸ்வதி பாயிடம் கூறினார்.பிறகு சீனிவாச நாயக்கர் துளசி தளத்தை போட்டு தன் வீடு வாசல், சொத்து, சுகம் அனைத்தையும் தானம் செய்துவிட்டார். பிறகு பாண்டுரங்கன் தரிசனம் தந்து சீனிவாச நாயக்கை நோக்கலானார். நீங்கள் இப்போதே சென்று கிருஷ்ணதேவராயரின் மதகுருவான ஸ்ரீவியாசராஜரிடம் சென்று உபதேசம் வாங்கிக் கொண்டு வந்தால் உங்களுக்கு தரிசனம் கிட்டும் என்று கூறினார். அது போலவே ஸ்ரீவியாசராஜரிடம் உபதேசம் பெற்று வந்தார். இப்பொழுது பகவான் அவருக்கு புரந்தரதாஸ் என்ற அங்கிதத்தை கொடுத்து இனிமேல் தன் பாடல்களில் அனைத்திற்கும் புரந்தரதாஸ் என்ற அங்கிதம் இருக்கட்டும் என கூறுகிறார்.புரந்தரதாஸர் ஆசாரசீலர். காலையில் நீராடி ஆசார அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு லஜ்ஜையைவிட்டு காலில் கஜ்ஜை கட்டிக் கொண்டு சிப்ளாகட்டையும் தம்பூரிதி சகிதம் உஞ்சவிருத்திக்கு

புறப்படுவார்.அவர் தொழில் உஞ்சவிருத்தியாயிற்று. செல்வ சீமானாக இருந்து மாடமாளிகையில் வாசம் செய்தவர் இன்று தெருவில் இருக்கிறார். அந்த அளவிற்கு அவருக்கு வைராக்கியம். வாழ்க்கையில் பற்றுதல் இல்லை. தாஸர் சங்கீத பிதாமஹர் என்று அழைக்கப்படுபவர். நாரதரின் மறு அவதாரம். பகவான் தாஸரை உலகிற்கு அறிமுகப்படுத்த எண்ணினார். ஆகவே பல திருவிளையாடல்களைச் செய்தார். ஒருநாள் தாசர் நள்ளிரவில் மலஜலம் கழிக்க வெளியே போய் வந்தார். தனது மகன் மத்வபதியிடம் ஒரு சொம்பு தண்ணீர் கொண்டுவா என்றார். ஆனால் தண்ணீர் கொண்டு வர சற்று தாமதம் ஆயிற்று. பகவானே சொம்பில் தண்ணீர் கொண்டுபோய் கொடுத்தார். தாசர் கோபங் கொண்டு ஏன் இவ்வளவு தாமதம் என்று சொம்பினாலேயே ஒரு போடு போட்டார். நிஜமான மத்வபதி தூங்கிக் கொண்டு இருந்தான். தாஸர் அவனை எழுப்பி கண்டித்திருக்கிறார். அர்ச்சகர்கள் பகவானின் ஆபரணங்களை கழற்றி அலங்காரம் செய்து கொண்டே வந்தார்கள். நெற்றியில் ஒரு இடத்தில் வீக்கம், கண்ணில் தாரை தாரையாக கண்ணீர். தாஸர் புரிந்து கொண்டார். பகவான் ஒரு நாள் புரந்தரதாஸ் ரூபத்தில் தாசி ஒருத்தியின் வீட்டிற்குச் சென்றார். உன் பாடலைக் கேட்டு வெகு நாட்கள் ஆகிவிட்டது ; நல்ல கீர்த்தனையாக ஒன்று பாடு, கேட்டு விட்டுப் போகிறேன் என்றார். அவள் பாடி முடித்ததும் வளையல் ஒன்றினை தானமாக கொடுத்தார். மறுநாள் அர்ச்சகர்கள் பகவானின் ஆபரணங்களை எடுத்திருக்கிறார்கள், அபிஷேகம் செய்துவிட்டு ஆபரணங்கள் போடும் போது பகவானின் ஒரு கையில் வளையல் இல்லை என்பதை கண்டு பிடித்தார்கள். தாசியோ தாஸர் தனக்கு தானமாகக் கொடுத்ததை ஜம்பமாக நினைத்து அனைவரிடம் கூறினார். கோயில்

நிர்வாகிகளுக்கு காதில் எட்டியது . தாஸரை சிறைபிடித்து ஜெயிலில் போட்டு அவரை துன்புறுத்தினார்கள். பகவான் ஆசரீரி ரூபத்தில் எல்லா விஷயங்களையும் கூறினார். தாஸர் வீட்டுக்கு முன் காவேரி, கோதாவரி, கிருஷ்ணா போன்ற நதி கன்னிகைகள் தினமும் கோலம் போட்டனர். தாஸரின் மனைவிக்கு ஒரே ஆச்சரியம், என்ன இது யார் கோலம் போட்டிருப்பார்கள் என அப்பெண்களைப் பார்த்து கேட்டாள். அம்மா நாங்கள் கங்கை, சிந்து, கோதாவரி போன்ற நதிகள். எல்லோரும் வந்து நதியில் மூழ்கி பாவங்களை போக்கி கொள்கிறேன் என்று பாவங்களை எங்களிடம் விட்டுசெல்கிறார்கள். எங்கள் பாவங்களை போக்க நாங்கள் உங்கள் வீட்டிற்கு கோலம் போடுகின்றோம் என கூறினார்கள். புரந்தரதாஸர் 4,75,000 பாடல்களை இயற்றினார். இதில் பழக்கத்தில் உள்ளது சுமார் 4000 கீர்த்தினைகள்தான். இவருடைய பாடல்கள் புரந்தரோபநிஷத் என்று கூறுவார்கள். இவர் ஹம்பியில் புஷ்யபகுள அமாவாசை அன்று மறைந்தார். இவர் நாரதரின் அவதாரம்.





# ஸ்ரீ விஜயதாஸர்

அக்ஞான திமிரச் சேதம் புத்தி ஸம்பத் ப்ரதாயகம் I
விக்ஞான விமலம் ஸாந்தம் விஜயாக்கிய குரும்பஜே II

இவர் வாழ்ந்த காலம் 1682 - 1755. இயற்பெயர் தாஸப்பன். ஏழ்மையின் காரணமாக அதிகம் படிக்கவில்லை. புரந்தரதாஸ் பகவானின் பேரில் 5 லக்ஷம் பாடல்கள் பாட வேண்டும் என நினைத்தார். ஆனால் 4,75,000 முடிவதற்குள் காலமாகிவிட்டார். பிறகு அவருடைய மகன் மத்வபதி என்பவர் விஜயதாஸாராக அவதரித்து மீதியுள்ள 25000 பாடல்களை எழுதினார். இவரது அவதார ஸ்தலம் சீகலபரவி என்பதாகும். ஒரு மிகப் பெரிய பணக்கார வீட்டில் ஏதோ விசேஷம் என்று அங்கே சாப்பாடு கிடைக்கும் என்று நம்பி போனார். அங்கே இவரை யாரும் கவனிக்கவில்லை; சாப்பிடு என்று கூட யாரும் சொல்லவில்லை; மூலையில் படுத்தார். பசி வயிற்றைக் கிள்ளியது. களைப்பு

மிகுதியால் தூங்கிவிட்டார். வீட்டின் சொந்தக்காரர் இவரை எழுப்பி வேறு இடத்தில் படுத்துக்கொள் என்கிறார். அன்று மார்கழி மாதம். இன்று என் வீட்டில் சாப்பிடு என்கிறார் ஒரு பெரியவர். எங்கேயோ அலைந்து திரிந்து காசிக்குச் சென்று விட்டார். ஓர் இரவு ஆண்டவன் கனவில் தோன்றி இவனுக்கு விஜயவிட்டல என்ற அங்கிதம் கொடுத்து விடுகிறார். உடனே வாயிலிருந்து பாடல்கள் வரத்தொடங்கின. மீண்டும் தன் சொந்த ஊருக்கு வருகிறார். விஜயதாசர் ஒரு சன்யாசி போல் வாழலானார். இவர் பல ஊர்களுக்குச் சென்றார். மத்வமத கொள்கைகளைப் பரப்பினார். துவைதமத சித்தாந்தத்தில் அசையாத நம்பிக்கை வைத்திருந்தார். இவர் சீடர்களில் மிகவும் முக்கியமானவர் கனகதாசர் என்பவர் ஆவார். இவர் சிப்பகிரி என்ற இடத்தில் ஒரு பெரிய சிவன் கோவில் இருக்கிறது. அங்கே உட்கார்ந்து கொண்டு பலபாடல்களை எழுதினார். எந்த தாஸர்களும் திருப்பதி ஸ்ரீனிவாசனை விடமாட்டார்கள். இவரும் ஒரு முறை வந்தார். ஏழுமலையான் தேரில் பவனி வருவதைக் கண்டார். நேராக வெங்கடேசனை தரிசிக்கச் சென்ற இவர் பல மணிகள் காத்திருந்தும் கடைசியில் பகவானைப் பார்க்க முடியாத நிலை ஏற்பட்டது. ஒரு சிறிய காகிதத்தில் ஏதோ எழுதி தேர் வரும்போது அதன் அடியில் போட்டார். பிறகு தேர் நகரவேயில்லை; என்ன முயன்றும் முடியவில்லை. அசரீரி ஒலித்தது. விஜயதாசர் ஆண்டவனை தரிசித்தால் தேர் நகரும் என்று. வெங்கடேசன் திருப்பதியில் இருப்பதற்கு காரணமானவரே விஜயதாஸர்தான். இவர் முற்பிறவியில் பிருகு முனிவராக இருந்தார். பல முனிவர்கள் ஒரு யாகம் செய்தனர்; யாகத்தின் முடிவில் யாருக்கு அவிர்பாகம் கொடுப்பது என்ற சர்ச்சை முளைத்தது. முனிவர்கள் பிருகு முனிவரை அனுப்பி யார்

தகுதியானவர் என நீங்களே தெரிந்து கொண்டு வாருங்கள் என்றனர். பிறகு பிருகு முனிவர், பிரம்மா - விஷ்ணு - சிவன் மூவரையும் சந்தித்தார். இவர்கள் மூன்று பேரும் தன்தன் மனைவிமார்களோடு சந்தோஷமாக பேசிக்கொண்டு இருப்பதை பார்த்த முனிவருக்குக் கோபம். நேராக விஷ்ணுவின் இதயத்தை நோக்கி ஒரு உதை விட்டார். அங்கே வாசம் செய்யும் மகாலக்ஷ்மி கோபமடைந்து கொல்லாப்பூர் சென்று அங்கே வாசம் செய்ய ஆரம்பித்து விட்டாள். அந்த கதை அப்படியே ஸ்ரீனிவாச கல்யாணம் வரை நீண்டு போகிறது. பிறகு தாயார் திருச்சானூர் வந்தது எல்லாம் அனைவரும் அறிந்ததே. இப்படித்தான் இவர் காரணகர்த்தா ஆனார், ஏழுமலையான் திருப்பதியில் இருக்க. ஒரு காலத்தில் இவர் பசியாலும் பட்டினியாலும் இருந்த காலத்தில் உதவி செய்தவரின் மகன் இறந்த செய்தி கேட்டு அந்த மகனை உயிர்ப்பித்தார். வியாசவிட்டல என்பவர் விஜயராய கவசம் எழுதி இருக்கிறார். அதை தினமும் படித்தால் மிகவும் நல்லது. இவரது பாடல்கள் பல ஆராய்ச்சிக்கு பயன்படுகின்றன. சிப்பகிரி என்ற இடத்தில் இவரது ஆராதனை கார்த்திக சுக்ல தசமி அன்று நடக்கிறது. மூலை முடுக்குகளில் வாழும் மாத்வர்கள் சிப்பகிரிக்கு ஆராதனைக்கு வருகின்றனர்.

வாழ்க விஜயதாஸர் நாமம்.





# ஸ்ரீ பாகண்ணா (என்கிற) ஸ்ரீ கோபால்தாசர்

(கி.பி. 1722 - 1762)

பூபால நுத பாதாப்ஜம் பாபானி பரிஹாரிணம் ।
கோபால தாஸம் மீடேஹம் கோபால ஹரிதர்சனம் ॥

கோபால் தாசரின் இயற்பெயர் பாகண்ணா என்பது ஆகும். இவர் பிறந்த ஊர் மொசரக்கல்லு என்பதாகும். இது கர்னாடகாவில் உள்ள ராய்ச்சூர் மாவட்டத்தில் இருக்கிறது. அங்கே முராரிராயர் - வெங்கம்மா என்ற தம்பதியினருக்கு மூத்த குமாரராக அவதரித்தார். முராரிராயர் மறைவுக்குப் பிறகு வெங்கம்மா தன் குழந்தைகளோடு சங்கராபுரம் என்ற கிராமத்திற்கு வந்தார். அந்த கிராமவாசிகள் அவர்களுக்கு ஒரு வித உதவியும் செய்யவில்லை. அருகில் உள்ள அனுமார்கோவில் அவர்கள் இருப்பிடமாயிற்று. ஒரு விவசாயி சிறிது பூமியையும் இன்னொரு விவசாயி சிறு தான்யமும் கொடுத்தார்கள். அவைகள் நல்ல விளைச்சலைக் கொடுத்தன. அரசாங்க தண்ணீரை சிலவு செய்ததற்காக அந்த ஊர் கர்ணம்

அவளை கடிந்து கொண்டார். வெங்கம்மா அவர்கள் வீட்டில் வேலை செய்யாததால் கர்ணத்திற்கு அவர் மீது ஏகப்பட்ட கோபம். தாயார் கண்ணீர் விடுவதைப் பார்த்த பாகண்ணா குளத்தில் நீர் வற்றிப் போகட்டும், கர்ணத்திற்கு குழந்தை இல்லாமல் போகட்டும் என்று சபித்தார். அவர் சபித்த வேளை கடைசிவரை குளத்தில் தண்ணீரும் இல்லை கர்ணத்திற்கு குழந்தையும் இல்லை. வெங்கம்மா அந்த ஊரில் உள்ள ஆசிரியரை அணுகி தன்னுடைய பையன்களுக்குப் போதிய கல்வி அறிவை கொடுத்திட வேண்டினாள். ஆசிரியரும் அதற்கு ஒப்புக்கொண்டார். அந்த ஊரில் உள்ள பெரிய மனிதர் ஒருவர் தன் பையனுக்கு உபநயனம் செய்து வைக்கையில் பாகண்ணாவிற்கும் செய்வித்தார். பாகண்ணா காயத்ரி மந்திரம் நன்றாக கூறுவார். காயத்ரி மந்திரம் என்பது சாதாரணமானது அல்ல. வேதங்களின் உறைவிடம். இராமாயணம் 24000 ஸ்லோகங்கள் என்றால் காயத்ரி மந்திரத்திலும் 24 எழுத்துக்கள் உள்ளன. காயத்ரி மந்திரத்திற்கு இணையான மந்திரம் ஒன்றும் இல்லை. பாகண்ணா காலையில் குளித்து விட்டு காயத்ரி மந்திரத்தை சொல்ல ஆரம்பிப்பான். ஒரு நாளைக்கு எத்தனை தடவை கூறுவானோ அவனுக்குத்தான் தெரியும். இரண்டு ஆண்டுகள் கழிந்தன. பாகண்ணா ஒரு நாள் காயத்ரி மந்திரம் ஜபிக்கும் போது பெரிய பாம்பு ஒன்று அவரைச் சுற்றிக் கொண்டது. அவருக்கு ஒன்றுமே தெரியாது. பாகண்ணனிடம் ஏதோ ஒரு சக்தி இருப்பதாக ஜனங்கள் நம்பினர். ஒரு நாள் பாகண்ணாவிற்கு அவருடைய நாக்கில் யாரோ பீஜாக்ஷரம் எழுதுவது போல் இருந்தது. அன்றிலிருந்து அவரது வாயிலிருந்து தேவரநாமாக்கள் வந்து குவிந்தன. அவர் ஒவ்வொரு மனிதனின் 3 பிறவிகள் பயனும் கூறுவார். இப்போது அவர் பெயர் கோபாலதாஸர். இவருடைய பெயரும் புகழும் எங்கும் பரவின. அவருடைய வார்த்தையில் புதிய

அத்யாயம் எழுதப்பட்டது. எதிர்காலப் பலனை அறிய அனைவரும் பாகண்ணாவை நாடினார்கள். பாகண்ணா சங்கராபுரத்தை விட்டு உத்தனூர் அடைந்தார். அங்குள்ள ஆலயத்தில் மக்களின் எதிர்காலம் கூறுதல்; மக்களை நல்வழிப்படுத்துதல் மற்றும் பகவானின் மேல் பாடல்கள் எழுதுவது போன்ற காரியங்களில் ஈடுபட்டார். வறுமையில் வாடிய அவர் ஏழைகளைக் கண்டால் மனம் வருந்தி அவர்களுக்கு தன்னால் ஆன உதவியைச் செய்வார். ஒரு நாள் அவர் வீட்டில் ஒரு விசேஷம் நடந்தது. பலர் வந்து உணவு உண்டார்கள். இன்னும் அரிசி தேவைப்பட்டது. தாயாரிடம் அரிசி வேண்டும் எனக் கேட்டார். தாயார் இல்லை என்று கூற பாகண்ணா வேறு இடத்திலிருந்து அரிசி கொணர்ந்து அன்றைய நிகழ்ச்சியை செவ்வனே ஈடேற்றினார். பிறகு அரிசி வீட்டில் ஏராளமாக இருப்பதைப் பார்த்து தாயாரைக் கடிந்து கொண்டார். ஒரு நாள் ஒரு அடர்ந்த காட்டு வழியில் போக நேர்ந்தது. அந்தக் காட்டில் வசித்து வந்த கொள்ளையனை திருத்தித் தன்வழி கொண்டு வந்தார். கொள்ளை அடிப்பதை தொழிலாகக் கொண்ட அவன் அன்றிலிருந்து அந்த தொழிலை விட்டு வேறு தொழிலை கற்றுக் கொண்டார். கோபால்தாசர் திருப்பதிக்குச் செல்கிறார். எப்போது போனாலும் மறுபடியும் வருவேன் உன் தரிசனத்திற்கு என்று கூறும் பாகண்ணா இம்முறை " ஹோகுவேனுபரலாரேமத்துஇல்லி " (போகுவேன் மறுபடி வரமாட்டேன்) என்று வெங்கடேசனிடம் கூறி விடைபெற்றுக் கொண்டார். உத்தனூர் வந்த அவர் சித்ரபானு வருடம் கிருஷ்ண பக்ஷ அஷ்டமி அன்று இந்த பூவுலகத்தைவிட்டு சென்றார். இவர் கணபதியின் அவதாரம். இவர் தன் ஆயுளில் 40 வருஷங்கள் ஸ்ரீ ஜகன்னாத தாஸருக்கு வழங்கினார்.



# ஸ்ரீ ஜெகன்னாத தாஸர்

(கி.பி. 1728 - 1809)

ஜல ஜேஷ்ட நிபாசாரம் ஜகதீஸ பதாஸ்ரயம் ।
ஜகத்தல விக்யாதம் ஜெகன்னாதகுரும் பஜே ॥

ஜெயதீர்த்தர் நியாய சுதாவை சம்ஸ்கிருதத்தில் எழுதினார். அதை படித்தவர்களைத்தான் இன்றைய தினம் மாத்வ பண்டிதர்களாக அங்கீகரிக்கப் பெறுகிறார்கள். ஆனால் கன்னட சுதா என்று சொல்லக்கூடிய ஹரிகதாம்ருத ஸாரத்தை கன்னடத்தில் எழுதியவர் ஜெகன்னாததாஸர் ஆவார். இந்த ஹரிகதாம்ருத ஸாரத்தில் சொல்லப்படாத விஷயங்களே இல்லை எனலாம். எல்லா விஷயங்களும் ஜெகன்னாததாசர் இதில் சொல்லி இருக்கிறார். மானவி என்ற ஊரில் நரசிம்மாச்சார்யார் என்று ஒரு மாத்வ அந்தணர் இருந்தார். அவருடைய புதல்வன்

ஸ்ரீனிவாசாச்சார். இவர் கொஞ்சம் கர்வம் உள்ளவர். ஹரிதாசர்களை நிந்திப்பதையே தொழிலாகக் கொண்டவர். இதனால்தானோ என்னவோ இவருக்கு தீராத வயிற்றுவலி உண்டாயிற்று. இவர் போகாத புண்ய க்ஷேத்திரங்கள் இல்லை. உத்தனூரில் ஆஞ்சநேய சுவாமி கோவிலில் இருக்கும் கோபால் தாஸரை அணுகி தன் வயிற்று வலிக்கு பரிகாரம் கேட்டார். அவர் ஒரு ரொட்டியைக் கொடுத்துச் சாப்பிடச் சொன்னார். கோபால் தாசர் தன்வந்திரியை நினைத்து ஒரு பாட்டு பாடுகிறார். ஸ்ரீனிவாசாச்சாருக்கு வயிற்றுவலி அகன்றது. திருப்பதிக்கு சென்ற கோபால்தாசரோடு ஸ்ரீனிவாசாச்சாரும் போகிறார். ஸ்ரீனிவாசாச்சார் மரணம் அடைகிறார். கோபால் தாசர் திரும்பி வந்து மரணம் அடைந்த ஸ்ரீனிவாசாச்சாரைப் பார்க்கிறார். பிறகு கோபாலதாசர் தன்னுடைய ஆயுளில் 40 ஆண்டுகள் அவருக்குக் கொடுக்கிறார். ஸ்ரீனிவாசாச்சார் உயிர் பெற்று எழுகிறார். ஸ்ரீனிவாசாச்சாரின் வேண்டுகோளின்படி கோபால்தாசர் அவரை சந்திராபாகா நதியில் நீராடச் சொல்கிறார். அங்கே அவருக்கு ஜகன்னாத விடல என்று பெயர் பதித்த ஒரு விக்ரஹம் கிடைக்கிறது. அதுவே அவருக்கு பெயராயிற்று. அன்று முதல் ஸ்ரீனிவாசாச்சார் ஜெகன்னாத தாஸரானார். இவருடைய சிஷ்யர் ஸ்ரீதரவிட்டல தாஸர் என்பவர் ஆவார்.

மானவியில் இவரது ஆராதனை பாத்ரபத சுக்ல நவமி அன்று சீரும் சிறப்புமாக கொண்டாடப் படுகிறது.

விஜயதாசரும் கோபாலதாசரும் இவருடைய குருகள் ஆவார்.



# ஸ்ரீ பிரஸன்ன வெங்கடதாஸர்

(கி.பி. 1680 - 1752)

பிஜாப்பூர் மாவட்டம் பாகல்கோட் என்று ஒரு ஊர். அங்கே இரு சகோதரர்கள் வாழ்ந்து வந்தார்கள்; மூத்தவன் பெயர் ராகவேந்திராச்சார்யா, இளையவன் பெயர் வெங்கண்ணா. மூத்தவரின் மனைவி பெயர் காவேரம்மா. சிறுபிராயத்திலேயே வெங்கண்ணா தாய் தந்தையரை இழந்தான். ஆகவே அவனுக்கு பள்ளி அனுபவம் இல்லை. முயற்சி எடுத்து ஆவன புரிவதற்கு ஆட்கள் இல்லை. வெங்கண்ணா காவேரியம்மாவின் கோரப்பிடியில் சிக்கித் தவித்தான். தமயனுக்கு பூஜைக்கு புஷ்பம், துளசி எடுத்து வருவது, தண்ணீர் கொணர்தல், விறகு வெட்டுவது - சாப்பாட்டிற்கு வேண்டியவற்றை கொணர்தல் போன்ற வேலைகள் அவனுக்கு இடப்பட்டன.

இந்த மாதிரியான சூழ்நிலையில் வெங்கண்ணாவிற்கு படிப்பின் மீது எப்படி நாட்டம் வரும்? ஒரு நாள் அவருடைய அண்ணன் ஊரில் இல்லாத போது அண்ணியிடம் குடிப்பதற்கு சற்று மோர் கேட்டான். ஆமாம் ராஜ பரம்பரையில் வந்த உனக்கு மோர் என்ன?, எது வேண்டுமானால் கொடுக்கலாம் என்று கூறி பழைய சாதத்தைப் போட்டாள். வெங்கண்ணாவின் அண்ணி மோர் கொண்டு வந்து எருமை மாட்டிற்கு வைத்தாள். அது குடித்தாலாவது கொஞ்சம் அதிகமாக பால் கொடுக்கும் என்றாள். இதை கண்ணுற்ற வெங்கண்ணாவிற்கு ஆத்திரம் வந்தது. கோபம் கொண்ட அவன் அண்ணியைப் பார்த்து தான் வீட்டை விட்டுப் போகப்போவதாகவும் அந்த வீட்டில் இனி ஒரு நிமிடமும் இருக்க மாட்டேன் என்று கூறி வீட்டை விட்டு வெளியேறினார். அண்ணி அவருடைய கணவர் வந்ததும் அவரிடம் சொல்லி விட்டுப் போய் வா என்றாள். வெங்கண்ணா எதுவுமே காதில் வாங்கிக் கொள்ளவில்லை. அவன் வெளியே வந்து தடாகத்தில் இருந்த தண்ணீரை வயிறு நிரம்ப மட்டும் குடித்தான். வெங்கண்ணா ஒரு படிக்காத மேதை. அவர் படிக்கவில்லை. இருந்தாலும் அவனுக்கு கூர்மையான அறிவு இருந்தது.

தாஸரின் பாடல்கள் அனைத்தும் வெங்கண்ணாவிற்கு அத்துப்படி. இப்படி யாருடைய உதவியுமின்றி தன்னுடைய அறிவுப் பசி, ஆன்மீகப் பசி இரண்டையும் வளர்த்துக் கொண்டார். எல்லா தாஸர்களையும் போலவே இவரும் திருப்பதி செல்ல தீர்மானித்தார். திருப்பதிக்கு வரும் வழியில் மந்திராலயம் சென்றார். அங்கே குரு ராகவேந்திரரை தரிசித்தார். அவர் மீது சில பாடல்களை இயற்றிப் பாடினார். ஒரு இரவில் மந்திராலய மகான் அவர் கணவில் தோன்றி திருப்பதியில் வெங்கடேசன் உன் வருகைக்காக காத்திருக்கிறான் என்று கூறினார். பக்தர்கள் எல்லாம் ஸ்ரீனிவாசா ஸ்ரீனிவாசா என்று கூறினார்கள். பிறகு பக்தர்கள் வராஹ சுவாமியைப் பார்த்துவிட்டு சுவாமி புஷ்கர்ணியில் குளித்தார்கள். வெங்கண்ணனும் அவர்கள் கூடச் சென்றார். வெங்கடாசலபதியை நேருக்கு நேர் தரிசித்தார். அவர் ஆழ்ந்த தியானத்தில் இருந்தார். கோவில் அதிகாரி பிரசாதம் கொடுத்தார்கள். வெங்கண்ணனுக்கு ஸ்ரீனிவாசனின் தரிசனம், பக்தர்களின் பாடல்கள், பிரசாதம் எல்லாம் நினைத்து திருப்பதியில் இருந்துவிடலாமா என்று கூட எண்ணினார். திருப்பதிக்கு வெங்கண்ணா வந்து 3 வருடங்கள் ஓடிவிட்டன. தினமும் ஸ்வாமி தரிசனம்-பஜனை-பிரசாதம், இந்த மூன்றிலுமே காலம் கழிந்தது. இப்பொழுது வெங்கண்ணா பிரசன்ன வெங்கட தாசராகி விட்டார். மீண்டும் பாகல்கோட் வந்தார். திட்டியவர்களெல்லாம் வாழ்த்தினர். அவருடைய அண்ணா ராகவேந்திராசார் நடந்ததெல்லாம் மறந்து விடு. நாமெல்லாம் ஒன்றாக இருக்கலாம் என்றார். பல பாடல்கள் இயற்றினார். 80 ஆண்டுகள் ஜீவித்திருந்தார். தாஸ ஸாகித்யா பிராஜெக்டின் அங்கீகாரம் பெற்ற பாடல் "பிடனோ நின்னங்கிரி ஸ்ரீனிவாசா நன்ன துடிஸி கொள்ளளோ ஸ்ரீனிவாசா" என்ற பாடல் இவர் இயற்றியது தான்.

மத்வ மகனீயர்கள் இன்னும் இருக்கின்றார்கள். அக்ஷோப்ய தீர்த்தர், த்ரிவிக்ரம பண்டிதாச்சார், நாராயண பண்டிதாச்சார், வித்யா பிரசன்னர், சத்தியநாதர், பிரம்மண்ய தீர்த்தர் என்று பட்டியல் போட்டால் இந்த புத்தகம் போதாது.

வாழ்க மத்வ மகனீயர்கள்.